

நமது அறநிலையத்துறையின் ஆதரவிலும் ஒத்துழைப்பிலும் திருக்கழுக்குன்றத்தில், ''திருஞானசம்பந்தர் இசைவிழா'' ஜூன்மாதம் 15,16,17 தேதிகளில் சிறப்புற நிகழ்ந்தபோது, அறநிலைய ஆணையர் திரு.கு. ஆளுடையபிள்ளை, இ.ஆ.ப. அவர்களும் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்களும், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்களும், தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றச் செயலர் 'நடிகமணி' திரு. டி. வி. நாராயணசாமி அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தல்.



திருக்கழுக்குன்றத்தில் நிகழ்ந்த ''திருஞானசம்பந்தர் இசைவிழா''வில், திரு. ஆர். ஷண்முகசிகாமணி, இ.ஆ.ப. (ஆணையர் மற்றும் செயலர், வணிகவரி-அறநிலையத்துறை) அவர்கள், 'முதுபெருஞ் சான்றோர்' தருமபுரம் திரு. வேலாயுத ஓதுவார் அவர்களுக்கு, நாவலர் டாக்டர் சச்சிதானந்த சிவகுமார் அறக்கட்டளைப் பட்டமும், அருள்மிகு நடராசர் திருவுருவச் சிலைப் பரிசும் வழங்குதல். இசைவிழாவின் செயலர் டாக்டர் சேலம் எஸ். ஜெயலட்சுமி அம்மையார் அவர்களும், அருள்மிகு வேதகிரீசுவரர் திருக்கோயிலின் தக்கார் டி.வி. சுந்தரமூர்த்தி அவர்களும், 'அறப்பேரொளி' கயப்பாக்கம் திரு. முத்துலிங்கரெட்டியார் அவர்களும் உடனுள்ளனர்.

முகப்பு

திருக்கழுக்குன்றம்
தாழ்வரைக்கோயிலின்
கோபுரத் திருக்காட்சி

# திருக்கோயில்

ஆசிரியர் : ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

| மாலை : 26 | திருவள்ளுவர் ஆண்டு 2015, ரத்தாஷி ஆண்டு - சித்திரை<br>மே, ஜூன் 1984 விலை ரூ. 4-00 | மணி : 5, 6 |
|---|---|---|

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

***திருக்கோயில்*** திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

**ஆணையர் அவர்கள்,**
**அறநிலைய ஆட்சித்துறை,**
**சென்னை — 600 034**

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரையுள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும்.

தனிப்பட்ட சந்தாதாரர்கள் ஒவ்வொருவரும் நேரடியாக ஆணையர் அலுவலகத்திற்கே பணம் அனுப்புமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறது.

நாளுக்கு நாள் உயர்ந்துவரும் தாள்விலை, அச்சகக் கட்டணம், அஞ்சல்தலைக் கட்டணம் காரணமாக, 1983 ஜனவரி முதல் "திருக்கோயில்" திங்கள் இதழின் ஆண்டுச்சந்தா உள்நாட்டிற்கு ரூ.15 லிருந்து ரூ.24 ஆகவும், இலங்கை மலேசியா முதலிய வெளிநாடுகளுக்கு ரூ.25 -லிருந்து ரூ.36 -ஆகவும் உயர்த்தப்பட்டுள்ளது.

**ஆதலின், திருக்கோயில் இதழின் ஆண்டுச் சந்தா 1983 ஜனவரி மாதம் முதல், பின்வருமாறு நிர்ணயிக்கப்படுகின்றது:**

| | |
|---|---|
| **உள்நாடு** | ரூ. 24.00 |
| **வெளிநாடு** | ரூ. 36.00 |

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும்பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும் பொழுது மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் (Pin Code) எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப்போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்



இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை வெளியீடு

# திருஞானசம்பந்தர் இசைவிழாவில் சிறப்புரை *

அறநிலையத்துறை அமைச்சர்
மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள்

## முன்னுரை:

பெரியவர் முத்துலிங்க ரெட்டியார் அவர்களே, இந்த விழாவைச் 'சங்கநூற் பெரும் புலவர்' அருட்டிரு அழகர் அடிகளார் அவர்களின் திருவுள்ளக் குறிப்பின்படி, திருக்கழுக்குன்றத்தில் 'அப்பர் தொண்டர் அணியினர்' முதலியவர்களுடன் சேர்ந்து, தொடர்ந்து வருகின்ற டாக்டர் சேலம் ஜெயலட்சுமி நடத்தி அவர்களே, சட்டமன்ற உறுப்பினர்-அருமைச் சகோதரர் ஆனூர் ஜெகதீசன் அவர்களே, ஓதுவாமூர்த்திகளே, பெரியோர்களே, தாய்மார்களே, பத்திரிகைப் பிரதிநிதிகள் அவர்களே, அனைவருக்கும் முதற்கண், என் நன்றி உரித்தாகுக.

ஆண்டுதோறும் சேலம் ஜெயலட்சுமிஅவர்கள் நடத்திக் கொண்டுவரும் இவ்விழாவில்- கடந்த இரண்டாண்டுகளாகவே -நடந்த இந் நிகழ்ச்சிகளிலெல்லாம் கலந்துகொள்ள இயலாத வாய்ப்பும் எதிர்பாராத சூழ்நிலையும் ஏற்பட்டு, இந்த ஆண்டு எப்படியும் கலந்து கொள்ளவேண்டும் என்ற உணர்வோடு, கலந்துகொள்ளுகிற வாய்ப்பைப் பெற்றதற்காக, நான் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைகிறேன்.

நடிகமணி டி.வி. நாராயணசாமி, அவர்கள் சொன்னது போன்று, தொடர்ந்து இந்த விழாவை-நால்வருக்கு என அமைக்கப்பட்டிருக்கும் இந்த ஆலயத்தின் சார்பில், புகழ்பெற்ற தொன்மைவாய்ந்த திருக்கழுக்குன்றம் நகரத்திலே-திருஞானசம்பந்தர் பெயராலே இசை விழாவை நடத்துவது என்பது மிகுந்த பொருத்தமான காரியம் ஆகும். ஆனால் இப்படிப்பட்ட இசைவிழாக்கள் எந்த அளவிற்குத் தமிழ் மக்களாலே இன்றைக்கு ஏற்றுக் கொள்ளப்படுகின்றன அல்லது உணரப்படுகின்றன என்பது, நாம் எல்லாம் எண்ணிப்பார்க்க வேண்டிய முக்கியமான நோக்கமாகும்.

## நால்வர் பெருமக்கள்:

நம்முடைய டாக்டர் சேலம் ஜெயலட்சுமி அவர்கள், தமிழ் இசைக்குத் தன்னை ஒப்படைத்துக் கொண்டு - அதிலே மிகச் சிறந்த ஆராய்ச்சிகளெல்லாம் நடத்தி - அதிலே டாக்டர் பட்டத்தையும் பெற்று-இந்தியத் துணைக் கண்டத்திலே மட்டுமின்றி உலக கண்டங்கள் முழுவதும், பல்வேறு நாடுகளிலே சுற்றுப்பயணம் செய்து, தமிழ் இசையை, தமிழ் இசையினுடைய சிறப்பை, உலகத்துக்கு உணர்த்திக் கொண்டு வருகின்ற, ஓர் ஆற்றல் மிக்க சிறப்பு வாய்ந்தவர்கள் ஆவார்கள். ஆனால் அவர்களைப் போன்றவர்கள் இன்றைக்குத் தமிழகத்திலே திருஞானசம்பந்தருக்கு விழா எடுத்து, அதற்கு இசைவிழா என்று பெயர் அமைத்து, நால்வரைப் பற்றி இந்தத் தமிழ் மக்களுக்குத் திருக்கழுக்குன்றத்திலே மூன்று நாள் விழா நடத்துகின்ற அந்தச் சிறப்போடு அவர்கள் இந்தமுயற்சியை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால்,நம் தமிழ்மக்கள் அத்தனை பேருக்கும் இன்றைக்கு நால்வரைப் பற்றித் தெரியுமா என்பதுதான், இன்றைக்கு உள்ள பிரச்னை. ஒருவேளை நாத்திகக் கருத்துக்களைத் தாங்கிக் கொண்டிருக்கிற அல்லது அப்படி ஒரு கருத்தை இயக்கிக் கொண்டிருக்கும் ஓர் இயக்கம் இருக்கிறதென்று எண்ணிக் கொண்டிருக்கிறவர்களுக்கு, இந்த நால்வரைப் பற்றித் தெரியாது என்று கருதுவோமானால், நான்வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அவர்களுக்குத் தெரிகிறதா, இல்லையா என்பதைவிட, ஆண்டவனை வணங்கிக்கொண்டு நெற்றியிலே திருநீறு அணிந்து கொண்டு, சைவசமயத்தவர் என்று தங்களைச் சிறப்போடு கூறிக் கொண்டு, ஆலயத்திற்குச் சென்று வழிபட்டுக் கொண்டிருக்கின்ற பெருமக்கள் ,பெரியவர்கள் எவ்வளவுபேர் இந்த நால்வரைப் பற்றித் தெரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதுதான், இன்றைக்குள்ள கேள்விக் குறியாகும்.

* திருக்கழுக்குன்றம் திருஞானசம்பந்தர் இசைவிழாவில் அமைச்சரின் சிறப்புரை —ஆசிரியர்

எனவே, நால்வரைப் பற்றி அறிமுகப்படுத்தத் தவறியவர்கள், எதிர்க் கருத்துக்கள் கொண்டவர்கள் அல்லது எதிர்க் கருத்துக்களுக்குச் சொந்தக்காரர்கள் என்று எண்ணுவதைவிட, இந்த நால்வரைப் பாராட்டி வணங்கிக் கொண்டிருக்கிறவர்களுக்கு, நால்வரைப் பற்றிப் போதிய அளவு தெரியாமலிருக்கிறது என்பதையும், நாம் ஏற்றுக் கொண்டாக வேண்டும். டாக்டர் சேலம் ஜெயலட்சுமி அவர்கள் இசைவிழா என்றும், தமிழ்விழா என்றும், தமிழ் இசைவிழா என்றும், தமிழ் இசைக்காக அவர்கள் பணியாற்றிக் கொண்டிருக்கின்ற இந்த நேரத்தில், அவர்களுடைய கருத்தை இந்த அறிக்கையிலேயே தந்திருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே, தமிழகத்தில், இசை மிகச் சிறந்தமுறையில் பாராட்டப் பெற்றது-விளங்கிக் கொண்டிருந்தது என்ற கருத்தைச் சொல்லி, அந்த இசையும் சமயமும் ஒன்றாக இருந்தன என்றும், அதுபோலச் சைவமும் தமிழும் ஒன்றாக இருந்தது என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

ஆகவே, தமிழ் என்று நாம் சொல்லுகின்ற நேரத்தில், தமிழைக் காப்பாற்ற வேண்டும், பாதுகாக்க வேண்டும், போற்ற வேண்டும் என்று எண்ணுகின்ற நேரத்தில், எந்தவகையில் நாம் தமிழைக் காப்பாற்றுவது பாதுகாப்பது, போற்றுவது என்பதிலேதான், எங்கேயோ நாம் தவறியிருக்கிறோம் என்பதை, இப்பொழுது உணர ஆரம்பித்திருக்கிறோம். தமிழ் என்று பேசத் தொடங்குகின்ற நேரத்தில் தமிழைப் பாதுகாக்கவேண்டும் என்று எண்ணுகிற நேரத்தில், முயற்சிகள் மேற்கொள்ளுகின்ற நேரத்தில், தமிழை எந்த இடத்திலேயிருந்து தொடங்குகிறோம் என்பதுதான் இன்றைக்கு மிகச் சிறந்த பிரச்னை. தமிழுக்காக வாழ்ந்தவர்கள், தமிழுக்காகப் பாடுபட்டவர்கள், தமிழைக் காப்பாற்ற முயன்றவர்கள் என்று இன்றைய இளைய தலைமுறையைக் கேட்டால், கவிஞர் என்று அடையாளம் காட்டச் சொன்னால், எங்களுடைய இயக்கத்தைச் சார்ந்தவர்கள் பாரதிதாசனைக் குறிப்பிடுவார்கள். தேசிய இயக்கத்தவரைக் கேட்டால், மகாகவி பாரதியைக் குறிப்பிடுவார்கள். சர்வ சமயக் கீர்த்தனைகளைப் பாடிக் கொண்டிருக்கிறஅந்த சன்மார்க்கவாதிகளைக் கேட்டால், அவர்கள் பாடிக் கொண்டிருக்கிற, மனப்பாடம் செய்து ஒப்பித்துக் கொண்டிருக்கிற நால்வரைப் பற்றிக் குறிப்பிடுவார்கள் அல்லது மூவரைப் பற்றிக் குறிப்பிடுவார்கள்.

## திருஞானசம்பந்தர் இசை விழா:

ஆனால் எவ்வளவு சதவிகிதம் இன்றைக்கு இளைஞர்கள் அல்லது ஆசிரியர்கள் இந்தத் தமிழை வளர்த்தவர்களை - போற்றியவர்களை - ஆதிகாலந்தொட்டு வளர்த்திருக்கின்றவர்களை - காப்பற்றியிருக்கின்றவர்களை நினைவு கூர்ந்திருக்கின்றார்கள் என்று பார்த்தால்தான், நாம் எங்கே தவறியிருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். இன்றைக்கு இந்த நால்வருக்கு ஆலயம் எழுப்பப்பட்டிருக்கிறது. நால்வர்கள் இங்கே சிலையாக வணங்கப்படுகிறார்கள். இந்த நால்வரிலே திருஞானசம்பந்தருக்கு என்ன அவ்வளவு சிறப்பு? அவருக்கும் இசைக்கும் என்ன தொடர்பு? என்பது பற்றி, நாளையும் மறுநாளையும் இங்கு அறிஞர்கள் எல்லாம் கருத்துக்களை எடுத்துச் சொல்லுவார்கள் என்று நான் கருதுகிறேன்.

நம்முடைய டாக்டர் சேலம் ஜெயலட்சுமி அவர்கள், இதிலே மிகச் சிறந்த ஆராய்ச்சியை நடத்திக் கொண்டிருக்கின்றவர்கள். நம்முடைய ஓதுவாமூர்த்திகளை இன்றைக்குக் கேட்டால்கூட, நீங்கள் திருமுறை என்கிறீர்களே, மூவர் தேவாரம் என்கிறீர்களே, மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் என்கிறீர்களே, ''திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்'' என்று இலக்கிய இலக்கணம் வகுக்கப்பட்டிருக்கின்றதே, இவற்றிற்கெல்லாம் அடிப்படைக் கருத்துக்கள் தெரியுமா? என்று கேட்டால்-அருள்கூர்ந்து ஓதுவாமூர்த்திகள் என்னை மன்னிப்பார்கள் என்று சொல்லுகிறேன் - அவற்றைப் பற்றியெல்லாம் சிந்திப்பதற்கு எங்களுக்குக் கற்றுக் தரவும் இல்லை, அதைத் கற்றுக்கொள்ள வேண்டிய அவசியமும் எங்களுக்கு நேரவில்லை-தேவாரத்தைச் சொல்லிக் கொடுத்தார்கள், பாடிக் கொண்டிருக்கிறோம். அது அப்பர் தேவாரமா? சம்பந்தர் தேவாரமா? அல்லது சுந்தரமூர்த்திகள் இயற்றிய தேவாரமா? என்றுதான் எங்களுக்குத் தெரியுமே தவிர, இந்த மூவரிலேயே எந்த அடிப்படைகளிலே இவர்கள் சிறந்து விளங்கினார்கள் என்று, நமது ஓதுவாமூர்த்திகளிலே எத்தனை பேருக்குத் தெரியும் என்பது எனக்குத் தெரியாது.

நமது மாண்புமிகு கல்வியமைச்சர் அவர்கள் ஒரு கருத்தைத் தெரிவித்தார்கள். இந்தத் திருமுறைகள், தேவாரம், திருவாசகத்தை நம்முடைய இசைவாணர்கள் புதிய பண்களிலே இசையமைத்து, இசைமேடைகளிலேயும் கச்சேரிகளிலேயும் ,இந்த நாட்டு இளைஞர்கள்- இன்றைக்கு இருக்கின்ற தலைமுறையினர் ஏற்றுக் கொள்ளுகிற வகையிலே, இந்தப் பாடல்களைப் பாட வேண்டும். இன்றைக்குத் தேவாரம் பாடுகின்றபொழுது என்ன எண்ணிக் கொண்டு இருக்கின்றார்கள் என்றால், ஆண்டவனைப் பற்றிய தோத்திரப் பாடல் பாடுகின்றார்கள், ஆலயத்திலே பாடவேண்டிய பாடல் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்களேதவிர, அவைகள் மக்கள் மத்தியிலே இசை அரங்குகளிலே பாடப்படுகின்ற பாடல் அல்ல என்று தவறாக எண்ணிக் கொண்டிருக்கின்ற பிழை

யான கருத்தை மாற்ற வேண்டும் என்று குறிப்பிட்டுக் கூறினார்கள். இதைத்தான் நீண்ட காலமாக நமது அறிவு இயக்கமும் சொல்லிக் கொண்டிருக்க்கிறது. ஆனால் துரதிருஷ்டவசமாக அதிலே என்ன நடந்துவிட்டது என்றால், அறிவு இயக்கம் என்ற பெயராலே, தமிழைப் பாதுகாக்கின்ற தமிழ் இயக்கம் என்ற பெயராலே, தமிழுக்காகப் பாடுபடுகின்ற இயக்கம் நடத்திய எங்களுடைய தலைவர்கள் அல்லது எங்களைப் போன்றவர்கள், எந்த இடத்திலேயிருந்து தொடங்குவது என்பதிலே தவறவிட்டு விட்டார்கள்.

இன்றைக்கு இந்தி எதிர்ப்பு என்ற அந்தக் காலத்திலேயிருந்துதான் தமிழைப் பாதுகாக்கிற இயக்கம் நடைபெற்றதாக நாம் கருதிக் கொண்டிருக்கிறோம். 1937-38லே இருந்து தான், தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டதாகக் கருதி வருகிறோம். அன்றைக்கு இந்த இயக்கத்துக்கு அரணாக விளங்கிய நம்முடைய மறைமலையடிகளார் போன்றவர்கள், நாவலர் சோமசுந்தரபாரதியார் போன்றவர்கள், மற்றும் தமிழ் அறிஞர்கள், சைவப் பெரியார்கள் போன்றவர்கள், அதற்கு முன்னாலேயே, பல நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே, தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம் நடந்தது என்பதை, எடுத்துச் சொல்லாமல் போய்விட்டார்கள். ஒருவேளை அந்த வேலை இப்போது நமக்குத் தேவையில்லை. பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டுவிட்டார்கள் போலிருக்கிறது அல்லது அடித்துக் கொண்டிருக்கிற புயலிலே அது எடுபடாது என்று கருதி விட்டுவிட்டார்களோ, என்னமோ தெரியாது.

இன்றைக்குத் தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம் என்பது, திருஞான சம்பந்தப் பெருமானால், 1300 ஆண்டுகளுக்கு முன்னாலே துவக்கி வைக்கப்பட்ட இயக்கம்! இவ்வுண்மையை, நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்! திருஞானசம்பந்தரைத் திருஞானசம்பந்தர் என்றுதான் நீங்கள் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்! அவர் தன்னைத் திருஞானசம்பந்தர் என்று சொல்லுவதைவிட, 'தமிழ் ஞானசம்பந்தன்' என்று சொன்ன மாபெரும் தமிழ் இயக்கத் தலைவர். 1300 ஆண்டுகளுக்கு முன்னாலே, தமிழகத்திலே தோன்றினார். தோன்றினார் என்றால், 80 வயது நிரம்பிய அப்பரும், அவரைப் பார்த்து வணங்கும் பக்குவத்தைப் பெற்ற 16 வயது இளைஞர் அவர்! அவர் இந்த மண்ணையெல்லாம் சுற்றி, தமிழகத்தைச்சுற்றி, தன்னுடைய பெயரைத் திருஞானசம்பந்தன் அல்ல, என்னுடைய பெயர் ''தமிழ் ஞானசம்பந்தன்.'' என்று கூறிக் கொண்டார்.

## 'தமிழ் ஞானசம்பந்தர்':

அதற்கு முன்னாலே தோன்றிய, ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றிய, மக்களுக்குத் தமிழுக்கு இலக்கணம் வகுத்துத் தந்த தொல்காப்பியர், தன்னைத் ''தமிழ்த் தொல்காப்பியன்'' என்று சொல்லவில்லை. உலகத்துக்குப் பொதுமறையைத் தந்த வள்ளுவர், தன்னைத் ''தமிழ்த் திருவள்ளுவன்'' என்று சொல்லிக் கொள்ளவில்லை. சிலப்பதிகாரத்தை வடித்துத் தந்த இளங்கோவடிகள் தன்னைத் ''தமிழ்இளங்கோ அடிகள்'' என்று சொல்லிக் கொள்ளவில்லை. அதற்கு முன்னாலேயும் எவரும் சொல்லவில்லை, அதற்குப் பின்னாலேயும் எவரும் சொல்லவில்லை. ஆனால் தமிழைப் பேசிய காரணத்தினாலே தமிழ்க்கவிஞர்கள் என்று பெயர் பெற்றார்களே தவிர, தமிழ்ப் பேச்சாளர்கள் என்று அழைக்கப்பெற்றார்களே தவிர, தமிழ் உரையாசிரியர்கள் என்று கூறப்பெற்றார்களே தவிர, வேறு இல்லை. தன்னையே 'தமிழ் ஞானசம்பந்தன்.' என்று சொன்ன தலைவர் ,1300 ஆண்டுகளுக்கு முன்னாலே தோன்றினார். அவர் தமிழைப் பாதுகாப்பதற்காகப் போராடியவர் என்பதை வரலாறுகள் மறைத்துவிட்டன. அதற்கு யார் காரணம் என்பதைத் திருமுறைகளைப்பரப்பிக் கொண்டிருக்கிற சைவ சித்தாந்தச் செம்மல்கள், சிவநெறிச் செல்வர்கள் ஆகியவர்களும் எடுத்துச் சொல்லத் தவறிவிட்டார்கள். தமிழுக்கென்று ஒரு புதிய இயக்கத்தை இந்த நூற்றாண்டிலே கண்ட எங்கள் தலைவர்களும் சொல்லத் தவறிவிட்டார்கள் என்று ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இந்த மண்ணிற்கு மிகத் தொன்மையான வரலாறு இருக்கிறது என்கிறோம். நாம் பேசுகிற தமிழ்மொழிக்கு ஆயிரக்கணக்கான காலமாக வரலாறு இருக்கிறது என்கிறோம். அப்படியானால் இந்த வரலாற்றுச்குச் சொந்தக்காரர்கள் முன்னாலே இருந்தார்களா இல்லையா? இராஜராஜனைக் குறிப்பிடும்போது, பிற நாடுகளுக்குப் படை எடுத்துச் சென்றான்; கடல் கடந்து வென்றான் என்று சொல்லுகின்றோமே, அதற்கு இன்று சான்றுகள் இல்லை, சின்னங்கள் இல்லை. ஆனால் அவன் நமக்குத் தேடிக் கொடுத்த திருமுறைகள்தான் இன்றைக்கும் தமிழைப் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றன. அவன் எழுப்பின ஆலயம்தான், ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னாலேயும் உலகத்தின்முன்னாலே 'தமிழனுடைய பெருமையைப் பார்' என்று எடுத்துக்காட்டும் வகையிலே, வான்ளாவிநின்று கொண்டிருக்கிறது. அப்படிப்பட்ட வரலாறுகளை நாம் கொண்டிருக்கிறோம் என்றால், 1300 ஆண்டுகளுக்கு முன்னாலே பிறந்து 16 வயதுக்குள்ளே தமிழ் மண்ணைச் சுற்றி, அன்றைக்குப் புயல் எனப் புகுந்த ஒரு வேற்று மதத்தை எதிர்த்து, அதனால் விளைந்த பற்பல சமுதாய வாழ்வியற் கேடுகளை நீக்கி, தமிழ் மக்களுக்கு நலம்பல புரிந்தார். அந்த மதம் புகுந்திருந்தால், ஒருவேளை தமிழ் அழிக்கப்பட்டிருக்கலாம். தமிழ்ப் பண்பாடுபோயிருக்

கலாம்; தமிழ் உணர்வு மங்கியிருக்கலாம்! அதனால்தான் திருஞானசம்பந்தரை நாம் ஒரு சிறந்த தமிழ் வீரராகவும், தலைவராகவும், சான்றோராகவும், போற்றி வணங்குகின்றோம்.

இன்றைக்கு நாம், திருஞானசம்பந்தர் மூன்று வயதிலேயே பாடினாரா? பாட முடியுமா? என்று கேள்வியைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். பாட முடியுமா முடியாதா? இன்றைக்கு உலகத்திலே பல இடங்களில் பல அற்புதங்கள் நிகழ்ந்திருக்கின்றன. 16 வயதுக்குள்ளே அவர் தமிழகத்தைச் சுற்றியிருக்க முடியுமா என்றால், 4000, 5000 தேவாரத்தை இயற்றியிருக்க முடியுமா என்றால், அவர் இரண்டு தாளங்களை மட்டுமே ,தன் கையிலே எடுத்துக் கொண்டு புறப்பட்டார். வேறு அவரிடத்திலே ஆயுதங்கள் இல்லை. அன்றைக்குப் புயல் போன்று பரவிக் கொண்டிருந்த, அரசோடு பின்னிக் கொண்டிருந்த ஒரு மதத்தை அவர் எதிர்த்தார். சைவத்தை நிலைநிறுத்த வேண்டும் என்பதற்காக அவர் பாடுபடவில்லை. தமிழை நிலைநிறுத்த வேண்டும் என்று அவர் பாடுபட்டார். இல்லையானால் தன்னுடைய பெயரைச் 'சைவஞானசம்பந்தன்' என்று அல்லவா அவர் சொல்லி இருக்கக்கூடும். அவர் 'தமிழ் ஞானசம்பந்தன்' என்று ஏன் சொல்லுகிறார் என்றால், தமிழை இந்த நாட்டு மக்களிடத்திலே, உயிரோட்டமுள்ள மொழியாக நினைவுபடுத்தியாக வேண்டும்.

## முதன்முதலில் தமிழைப் புகழ்ந்து பலவாறு சிறப்பித்தவர்:

அதுமாத்திரமல்ல. தமிழைப் பற்றி முன்னாலேயும் பாடல் இருக்கிறது. பின்னாலேயும் பாடல் இருக்கிறது. ஆனால் தமிழைப் பலவகையானசிறப்பு அடைமொழிகளோடு அழைத்த ஒரு மிகப் பெரிய புலவர் திருஞானசம்பந்தர்தான். அதற்குப் பிறகுதான தமிழை அடைமொழியோடு, பின்னாலே வாழ்ந்தவர்கள் அழைத்தார்கள். திருஞானசம்பந்தர் காலத்திலேதான் தமிழ் அடைமொழியோடு அழைக்கப்படுகின்றது. அவர் 'செந்தமிழ்' என்கிறார். 'இன்தமிழ்' என்கிறார். 'பைந்தமிழ்' என்கிறார். 'வண்தமிழ்' என்கிறார். 'தண்டமிழ், ஞானத்தமிழ், கன்னித்தமிழ், கலைமலியும் தமிழ், சங்கமலி தமிழ்' என்று 1300 ஆண்டுகளுக்கு முன்னாலே தமிழைப் போற்றியவர் திருஞானசம்பந்தர். நாடு முழுவதும் சுற்றித் தமிழைப் பரப்பிவந்தார். நாலாயிரம் ஐயாயிரம் பாடல்கள் இயற்றித் தந்திருக்கிறார். நமக்குக் கிடைத்திருப்பது அவ்வளவுதான். அவர் எவ்வளவு இயற்றினாரோ நமக்குத் தெரியாது.

## ''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்'':

இங்கேகூட அவர்கள் அறிக்கையிலே, ''மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்-வைகலும் எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறையில்லை'' என்று பாடுகின்றார். ஏன் பாடுகின்றார் என்று கருதுகிறீர்கள்? இன்று பகுத்தறிவு இயக்கத்தைச் சார்ந்த நாங்கள் இந்த உலகத்தினுடைய வாழ்க்கையையே, சமயங்கள் வேண்டாம் என்று மறுதலிக்கின்றன என்று தவறாக நினைத்துக் கொண்டோம். நாங்கள் இந்த ஆஸ்திக உணர்வுகள் அல்லது ஆன்மீக உணர்வுகள் நிலையாமை என்று சொல்லியதை,இந்த உலகத்தைப் புறக்கணிக்க வேண்டுமென்று சமயங்கள் சொல்லித் தருகின்றன; உலகத்திலே மக்கள் வாழப்பிறக்கவில்லை, வருந்தத்தான் பிறக்கிறார்கள் என்று எல்லாம் சொல்லிக் கொண்டிருக்கின்றன என்று,தவறாக உணர்ந்து கொண்டோம். மனிதன் வாழ்வதற்காகத்தான் பிறந்தான், வாழ்க்கை வாழ்வதற்கே என்று யாரோ இன்றைக்குச் சொல்லுவதாகச் சொல்லிக் கொண்டிருக்கிறோமே, இதை 1300 ஆண்டுகளுக்கு முன்னாலே சொல்லுகிறார் ''மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்''! அது மாத்திரம் அல்ல. இந்தப் பாட்டின் பின்னாலேயே வருகிறது:நல்ல பெண்களோடு இணைந்து வாழலாம் என்று. பின்னாலே வருகின்ற அடியிலே அக்கருத்து இருக்கின்றது. எதற்காக இதைச்சொல்கிறார் என்றால், அன்றைக்குப் புயல் போன்று புகுந்த மதம், இந்த மண்ணையே நிலையாது என்று சொன்னது. பெண்களை வெறுத்து ஒதுக்க வேண்டும் என்று சொன்னது. பெண்களே கூடாது என்று சொன்னது. பெண்களே இல்லாதிருந்தால் இன்றைக்குப் புல்பூண்டு இவைகளோடுதான் இருந்திருக்கும். அந்த மதத்தை எதிர்த்துத்தான் ஆர்ப்பரித்தெழுந்தார் ஒரு பத்துப் பதினைந்து வயதுப் பாலகர். அப்படிப்பட்டவர் திருஞானசம்பந்தர்! அவர் இரண்டு தாளங்களை மட்டுமே வைத்துக்கொண்டுதான் புறப்படுகிறார்.

**மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்; வைகலும்**
**எண்ணில் நல்லகதிக்கு யாதும் ஓர் குறைவில்லை;**
**கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்ப்**
**பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே!**

—சம்பந்தர்

## தமிழ்பரப்பிய தமிழ் வீரர்:

நாட்டின் மூலைமுடுக்கர் எங்கணும் சென்று, தமிழைப் பரப்புகின்றார். முத்தமிழையும் வளர்க்கின்றார். ''உங்கள் கடவுள் எங்கே இருக்கிறான்?'' என்று யாராவது கேட்டால், எங்கள் சிவபிரான் கயிலாசத்திலோ, பிற இடங்களிலோ இருக்கிறார் என்று கூறாமல், ''எங்கெங்கே தமிழின் அருமை பெருமைகள், சிறப்புக்கள் நயங்கள் எடுத்துப் பேசப்படுகின்றனவோ, அங்கெல்லாம் இருக்கின்றார்; எங்கெங்கே நல்ல இசைக்கருவிகளுடன், தமிழிசை சிறப்பாகப் போற்றிப் பாடப்பெறுகின்றதோ,

அங்கெல்லாம் எங்கள் சிவபிரான் இருக்கின்றார்'' என்கின்றார், தமிழ்ஞானசம்பந்தர்!

"தமிழின் நீர்மை பேசித்
தாளம் வீணை பண்ணி, நல்ல
முழவம் மொந்தை மல்குபாடல்
செய்கை இடம் ஓவார்"

என்பது சம்பந்தர் தேவாரம். உங்கள் கடவுள் எவ்வாறு இருக்கின்றான் என்று யாராவது கேட்டால், ''எங்கள் இறைவன் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை ஆகிய பண்களாகவும், அவற்றிற்குரிய சப்த சுரங்களாகிய பதங்கள் ஏழாகவும், பலவகையான சந்த அமைப்புக்களாகவும், பலவேறு தாளங்களாகவும், அவற்றின் ஒலி அலகுகளாகவும், அத்தாளங்களுக்குரிய பலவேறு மெய்ப்பாடுகளாகிய சுவைகளாகவும், விளங்குகின்றார்'' என்று வலியுறுத்திக் கூறுகின்றார்.

"பண்ணும், பதம் ஏழும்,
பலவோசைத் தமிழவையும்,
உள்நின்றதோர் சுவையும்,
உறுதாளத்து ஒலிபலவும், ஆனான்"

என்பது சம்பந்தரின் திருமொழி. இவ்வாறெல்லாம் தமிழையும் தமிழ்இசையையும், நாட்டில் மூலைமுடுக்கர்களிலெல்லாம்சென்றுதீவிரமாகப் பரப்பியதனால்தான், திருஞானசம்பந்தரைச் சுந்தரமூர்த்திசுவாமிகள்,

"நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்
ஞானசம்பந்தனுக்கு, உலகவர்முன்
தாளம் ஈந்து, அவன் பாடலுக்கு
இரங்கும் தன்மையாளன்"

என்று போற்றிப் புகழ்கின்றார். இதுமட்டுமா? சைவத் திருமுறைகளைத் தொகுத்து வகுத்தளித்த நம்பியாண்டார் நம்பிகள்,

"ஆறது ஏறும் சடையான்
அருள்மேவ, அவனியர்க்கு
வீறது ஏறும் தமிழால் வழிகண்டவன்"

என்று, பதினொன்றாம் திருமுறையில் புகழ்ந்து போற்றித் துதிக்கின்றார்.

திருஞானசம்பந்தருக்கு முன்னே தொல்காப்பியர்-திருவள்ளுவர்-நக்கீரர்-இளங்கோவடிகள் போன்ற எத்தனையோ மாபெரும் தமிழ்ச் சான்றோர்கள் வாழ்ந்திருந்தனர். ஆனால் அவர்களுள் ஒவ்வொருவரும், தத்தம் நூல்களைத் தனித்திருந்தே சிந்தித்து ஆராய்ந்து இயற்றியருளினர். தமிழ்நாடு முழுவதும் சுற்றித் திருவுலாச் செய்து, தமிழ் மொழியைப் பரப்புகின்ற செயலை அவர்களுள் ஒருவரும் மேற்கொள்ளவில்லை. திருஞானசம்பந்தர் ஒருவர் மட்டுமே, முதன்முதலாக, 1300 ஆண்டுகளுக்கு முன்பு தமிழைத் தீவிரமாகப் பரப்பும் செயலை வீரத்துடன் மேற்கொண்டார். தமிழைப் பரப்பும் ஓர் இயக்கத்தைத் தோற்றுவித்தார். அந்த இயக்கம் வளர்வதற்காக இசையைக் கருவியாகக் கொண்டார். "If you want to change the ill-fortune of a Nation, you must change well the tune of that Nation" என்னும் உண்மையை உணர்ந்து, தமது இசைக் கலையின் திறனால், தமிழ் மக்களைத் தட்டி எழுப்பி, தமிழ்மக்களுக்கு விழிப்பையும் உணர்ச்சியையும் ஊட்டி, தமிழகத்திற்கு நலம் பல விளைவித்தவர் திருஞானசம்பந்தரேயாவர்

"மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியவர்என்று உந்தீபற
தவத்தின் தலைவர்என்று உந்தீபற"

என்றபடி, அறிஞர்களிடம் மட்டுமே ஒதுங்கி உறைந்து மூலையிற் கிடந்துவந்த தமிழை, மக்கட் சமுதாய மத்தியிலே கொண்டு வந்து நிறுத்தி, வளர்த்துக் காத்தருளிய பெருமை, திருஞானசம்பந்தர்க்கே உண்டு. அதனாலே தான், திருஞானசம்பந்தரை மிகவும் சிறப்பாகப் போற்றித் துதித்துத் திருக்கழுக்குன்றத்தில் தொடர்ந்துபலஆண்டுகளாகத்திருக்குறட்பீடம் குருகுலம் அருட்டிரு அழகர் அடிகளார் அவர்களின் திருவுளப் குறிப்பின்படி, அன்பர்கள் பலரும் சேர்ந்து, இங்கு இசைவிழாக்கொண்டாடுகின்றனர்.

## அப்பர் பெருமான்:

அதனாலேதான் சம்பந்தர் ஆகிய பதினாறு வயதுச் சிறுவரை, பதினாறு வயதுப் பாலகரை, எண்பதாண்டு முதிர்ந்து, ஆயிரம் பிறைகண்டவர் ஆகிய அவ்வளவு பெரிய அப்பர்-திருநாவுக்கரசு நாயனார் - திருநாவுக்கரசர் பெருமான் வாழ்த்தி வணங்குகிறார். அஃது, அற்புதமான பெரியவர்கள் சந்தித்தால் எப்படி இருக்கும் என்பதற்கு, இன்றைக்கும் இலக்கணமாக இருக்கின்றது. ஆனால் இன்றைக்கு நம்முடைய பிள்ளைகளுக்கு நாம் என்ன சொல்லிக் கொண்டு வந்திருக்கிறோம்? என்ன மரியாதையைக் கற்றுத் தந்து கொண்டிருக்கிறோம்? அப்பாவைப்பார்த்தாலே பையன் ''என்னப்பா, டாட்டா'' என்று நிமிர்ந்து மரம்போல கையைக் காட்டிவிட்டுப் போகிறான். பெற்ற தாயைப் பார்த்தால் அம்மா என்று வணங்குகிற உள்ளத்தை இன்று மறக்கடித்து விட்டோம். தாயை 'மம்மி' (Mummy) என்றும், தந்தையை 'டாடி' (Daddy) என்றும்தான் நம் குழந்தைகள் கூப்பிடுகின்றன. பெரியவர்களைப் பார்த்தால் பக்தி வேண்டும், வணக்கம் வேண்டும். வணங்குவதற்காகவே தமிழில் வணக்கம் என்ற சொல்லைக் கூறுகின்றோம். அந்த வணக்கம் என்ற சொல்லிலேயே, வணங்குதல் ,பணிவு இருக்கின்றது.

ஆனால் அப்படிப்பட்ட சொல்பிறந்த நம் தமிழ் நாட்டில் பிறந்த இளைஞர்கள், இன்றைக்கு எதைக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள்? இவர்களுக்கு இந்தப் பாடத்தை நாம் சொல்லித்தர வேண்டும்.

திருநாவுக்கரசு நாயனாரும், திருஞான சம்பந்தரும் சந்திக்கும் காட்சிஇருக்கிறதே, இது பெரிய அற்புதமான காட்சி. வயதால் முதியவர் அப்பர்; வயதிலே சிறியவர், திருஞானசம்பந்தர். 'மூர்த்தி சிறியதானாலும் கீர்த்தி பெரியது' என்பது நமது நாட்டுப் பழமொழி. திருஞான சம்பந்தர் வருகிறார்; அவரைப் பல்லக்கிலே சுமந்துகொண்டு வருகிறார்கள். அப்படி சுமந்து கொண்டு வருகிறவர்களிலே வயதிற் பெரிய அப்பரும் இருக்கிறார். ஆனால் அப்பர் அங்கு இருக்கிறார் என்று திருஞானசம்பந்தருக்குத் தெரியாது. அதனால் திருஞானசம்பந்தர், 'அப்பர் எங்கே? எங்கே'? என்று தேடுகிறார். அப்பர் என்று சொல்லுகிறோமே, இந்த வார்த்தையே அப்போதுதான் வருகிறது. அதற்கு முன்னாலே 'அப்பர்' என்ற பெயர் அவருக்கு இல்லை.

ஆகவே திருநாவுக்கரசர் எங்கே? எங்கே? என்று ஞானசம்பந்தர் தேடுகிறார். கடைசியிலே பார்த்தால், அந்த சிவிகையைத்தூக்கிக் கொண்டுவருகிறவர்களிலே, இந்தப்பெரியவரும் இருக்கிறார். எவ்வளவு பண்பு பாருங்கள்! ஒரு பதினைந்து வயதுச் சிறுவர்தான் சம்பந்தர்! அவரைத் தூக்கிக் கொண்டு வரவேண்டும் என்று, எழுபது எண்பது வயதுடைய பெரியவர் எண்ணுகிறார் என்றால், அவர் என்ன, ஆற்றலிலே குறைந்தவரா, திருஞானசம்பந்தரைவிட! அவர் என்ன அவ்வளவு அற்புதங்கள் செய்யாதவரா? அல்லது தமிழகத்திலேபாராட்டப்படாதவரா? வணக்கத்திற்குத் தகுதி இல்லாதவரா? ஆனாலும் யாரையும் மதிக்கவேண்டும் என்ற அந்த உணர்வு ,பெரியவர்களிடத்திலே அன்று இருந்தது. எங்கே திருநாவுக்கரசர் என்று சம்பந்தர் கேட்கிறார். தங்கள் பல்லக்கைச் சுமந்து கொண்டு வருகிறார் என்று சொன்னார்கள். அதைக் கேட்டதுமே பதைபதைத்துத் திடுக்கிட்டு, பல்லக்கைக் கீழே இறக்குங்கள் என்று சொல்லுகிறார் ஞானசம்பந்தர். என்ன காரியம் செய்து கொண்டிருக்கிறீர்கள் நீங்கள்? நீங்கள் என்னைச் சுமப்பதா? நான் உங்கள் தோளின்மீது வருவதா? என்று வினவி, அப்போதுதான் அழைக்கிறார் சம்பந்தர் 'அப்பரே' என்று. திருநாவுக்கரசர் என்று பெயர் சொல்லக்கூட விரும்பவில்லை. அவ்வளவுபெரியவரை எப்படி அழைப்பது? தமிழிலே தகுந்த ஒரு சிறந்த சொல்லைக் கண்டுபிடிக்கிறார் தமிழ் ஞானசம்பந்தர், அப்பரே என்று! திருநாவுக்கரசருக்கு அப்போதுதான் அப்பர் என்ற பெயர் வருகிறது.

## திருமுறைகள்:

இவ்வளவு சிறந்த பண்பாடுகளை வளர்த்துக் கொண்டிருக்கின்ற திருமுறைகளை, நாம் நம் குழந்தைகளுக்கு எங்கே சொல்லிக் கொடுத்திருக்கிறோம். எங்கேயோ ஒதுக்கித் தள்ளிவிட்டோம். அதற்கு எங்களை மாத்திரம் குற்ற சொல்லாதீர்கள். அதற்கு உரியவர்களும் காரணம். அக்குற்றத்தை ஏற்றுக் கொள்ளுவோம். மறந்துவிட்டோம். மறைத்துவிட்டோம். நடிகமணி டி.வி.என். அவர்கள் சொன்னார்கள், யாரோ மொழி விரோதிகள் இந்த திருமுறைகளை, தேவாரத்தை எங்கேயோ மறைத்து வைத்தார்கள் என்று. அது மொழி விரோதிகள் என்று வரலாற்றிலே புதிய பாடமாகச் சொல்ல வேண்டும். யாரோ விவரம் தெரியாதவர்கள், எங்கேயோ கொண்டுபோய் மறைத்து வைத்திருக்கிறார்கள். இன்றைக்கும் 18ஆம் பெருக்கிலே நம்முடைய சமுதாயத்திலே இருக்கிற நம்முடைய பெரும் இலக்கியங்களைக்கொண்டு போய்க் கரைத்துவிட்டுக்கொண்டிருக்கிறோமே அதுபோல். சிதம்பரம் நடராஜர் ஆலயத்திற்குள்ளேபோய்ப் பூட்டி வைத்திருக்கிறார்கள், அதனை ஒருவர் சொல்லிக் கேட்டுத்தான், இராஜராஜ சோழன் போனான். ஆகவே பூட்டி வைத்தவர்களை நாம் பழி சொல்ல வேண்டாம். ஆனால் பூட்டி வைத்ததைக் கொடுக்க மறுத்தார்களே, அந்தப் பரம்பரை இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறது. நீங்கள் அதையும் நினைவிலே வைத்துக் கொள்ளவேண்டும்.

ஆகவே அன்றைக்கு நம் இராஜராஜ சோழன் திருமுறைகளை எடுத்து வெளியே கொண்டு வரவில்லையானால், தமிழ் ஏது! தொல்காப்பியத்திலே தொடங்குகிறோமே, தொல்காப்பியம் இல்லையானால் தமிழ் ஏது? சிலப்பதிகாரம் இல்லையானால் தமிழ் ஏது? கம்பராமாயாணம் இல்லயையானால் தமிழ் ஏது? சீவகசிந்தாமணி முதலிய பல்வேறு இலக்கியங்கள், இவை எல்லாம் சமய இலக்கியங்கள். ஆனால் எந்தக் காலத்திலே எந்த நோக்கத்திற்காக இந்த இலக்கியங்கள் தோன்றின? இதைத்தான் பார்க்க வேண்டும். ஆனால் அத்தனையும் தமிழ் வயிரம் தான். தங்கம்தான். அவற்றால் செய்யப்பட்ட நகைகள் வேறாக இருக்கலாம். அதனால், தங்கத்தைத் தூர எறிந்துவிட முடியுமா? வயிரத்தை ஒதுக்கிவிட முடியுமா? அன்றைக்குத் தேவை அந்தத் தங்கத்திலே வைரத்தை வைத்து மகிழ்ந்தார்கள். ஆனால் இன்றைக்கு வேண்டுமானால் வேறு தங்கத்தில் வேறு வைரத்தை வைத்துப் பார்க்கலாம். ஆனால் அன்றைக்கு இருந்த தங்கத்தை ஒதுக்கிவிட முடியுமா? அது தங்கம் இல்லை என்று சொல்ல முடியுமா? சொல்ல முடியுமானால், அன்று இருந்தது பத்தரை மாற்றுத் தங்கம்! இன்று பாலித் தங்கம் எல்லாம் பல்லிளித்துக் கொண்டிருக்கின்றன.

## தமிழ் இயக்கம்:

தேவார திருவாசகத் திருமுறைகளைப் போலவும், திவ்வியப் பிரபந்தங்களைப் போலவும், சிறந்த தெய்விக இலக்கியங்கள் வேறு இருக்க முடியுமா? அப்படிப்பட்ட ஆற்றல்மிக்க இசையோடு, தமிழை வளர்த்த-சமயத்தை வளர்த்த -பண்பாட்டை வளர்த்தவர்தான் திருஞானசம்பந்தர், தமிழ்ஞானசம்பந்தர்! அவர் அன்று தமிழ் இயக்கத்தையே நடத்தினார். மனதில் வைத்துக் கொள்ளவேண்டும். அன்று இருந்த சூழ்நிலையில் ஒரு தமிழ் இயக்கத்தை நடத்திய தலைவர், தமிழ்இனத் தலைவர், 1300 ஆண்டுகளுக்கு முன்னே தோன்றினார். அதனாலேதான் இவர்கள் திருஞானசம்பந்தர் திருவிழா என்று எடுத்திருக்கின்றார்கள். அவர் பிராமணக் குலத்திலேதான் பிறந்தார். ஆனால் காயத்திரி மந்திர ஜெபங்களைச் செய்ய முன்வரவில்லை. அவர் தமிழிலேதான் பாடினார். அவரோடுகூட வாத்தியம் வாசித்தவர் யார் தெரியுமா? பாணராக இருந்த திருநீலகண்டர். அவருடைய ஜாதியைப் பார்க்கவில்லை. அவர் முன்னாலே தமிழ்ச் சமுதாயம்தெரிந்தது. தமிழ்ச் சமுதாயத்தின் ஓர் அங்கமாகத் தன்னை மாற்றிக்கொண்டார், திருஞானசம்பந்தர்!

அந்தக் காலத்திலே வாழ்ந்தவர்கள் அப்பர், சுந்தரர்! மாணிக்கவாசகர் இருந்தாரா? முன்னாலே இருந்தாரா? பின்னாலே இருந்தாரா! ஆராய்ச்சியாளர்கள் மோதிக் கொண்டிருக்கிறார்கள். நமக்கு அதுபற்றிக் கவலையில்லை. தேவாரம் பாடிய அப்பர் இருந்தார். அருமையான திருவாசகம் பாடிய மணிவாசகர் இருந்தார். நமது வள்ளலார் உருகி உருகிப் பாடித் திருவருட்பா என்னும் இலக்கியத்தினைத் தந்தார். அந்த இலைக்கியங்களை எல்லாம் நாம் பாதுகாக்க வேண்டாமா? அது ஓதுவாமூர்த்திகளிடையே மட்டும் கொஞ்சம் கொஞ்சமாகத் தொத்திக் கொண்டிருக்க நாம் விட்டுவிடலாமா? அது சமுதாயத்துக்கு வரவேண்டாமா? மன்றங்களிலே ஏற வேண்டாமா? இலக்கியங்களாக மாற வேண்டாமா? பாடல்களாக மாணவர்களுக்குக் கற்பிக்கப்பட வேண்டாமா? இசை மேடைகளிலே முழங்க வேண்டாமா? தமிழ்நாட்டுப் பண்பு இது என்று தெரிய வேண்டாமா?

## தமிழ்இசையின் தொன்மையும் சிறப்பும்:

இன்றைக்குக் கர்நாடக இசைஎன்றால், நமது தியாகையரையும், சியாமாசாஸ்திரிகளையும், தீட்சிதரையுமே சொல்லிக் கொண்டிருக்கிறோம். அவர்களிலே இருவர் தெலுங்கிலே பாடியவர்கள். ஒருவர் சம்ஸ்கிருதத்திலே பாடியவர். அவர்களுடைய காலம் 1760க்குப் பிறகு தொடங்கி 1815-20க்குள்ளேமுடிகிறது. ஆனால் இந்தத் தமிழகத்திலே, அதற்கு முன்னாலே இசையே இல்லையா? இசை இல்லையானால் இரண்டு தாளங்களை வைத்துக்கொண்டு, ஏழாம் நூற்றாண்டிலே திருஞானசம்பந்தர் பாடியிருக்கமுடியுமா? பண்ணிசைக்கத் தியாகையர் பிறப்பதற்கு முன்னாலே, சியாமா சாஸ்திரிகள் தோன்றுவதற்கு முன்னாலே, தீட்சிதர் இந்த மண்ணுக்கு வருவதற்கு முன்னாலே, அதே தஞ்சை மாவட்டத்தில் வேறுசங்கீத மும்மூர்த்திகள் தோன்றினார்கள். அவர்கள் தமிழிலே பாடினார்கள். அருணாசலக் கவிராயர், எத்தனை பேருக்குத் தெரியும்? இன்று அப்பேர்ப்பட்ட முத்துத்தாண்டவர் எத்தனை பேருக்குத்தெரியும்? மாரிமுத்துப்பிள்ளை, எத்தனைபேருக்குத் தெரியும்? இதிலே ஒருவர் 1600ல் தோன்றினார். மற்ற இருவரும் 1700ல் தோன்றித் தியாகையர் காலத்திலே மறைந்தார்கள். இவர்கள் ஏனோ மும்மூர்த்திகள் என்று அழைக்கப்படவில்லை.

நாம் இவர்களைப்பற்றி எல்லாம் தெரிந்து கொள்ளாததனாலே, கர்நாடகஇசை 1760க்குப் பின்னாலேதான் தோன்றியது என்று நாம் எண்ணிக் கொண்டிருக்கிறோம். சொல்லுகிறவர்கள் மீது தப்பு இல்லை. ஆனால் உண்மைகள் மக்கள் சமுதாயத்துக்குத் தெரிவிக்கப்படவில்லை. தமிழிலே இசை இல்லை என்கிறார்கள். தமிழ் இசை இந்த நூற்றாண்டினுடைய தொடக்கத்திலேதான் வந்தது என்று கருதாதீர்கள். இது 1300 ஆண்டுகளுக்கு முன்னாலேயே வந்திருக்கிறது. அதனாலேதான் தமிழ்ஞானசம்பந்தர் தோன்றியிருக்கிறார். 1300 ஆண்டுகளுக்கு முன் உலகத்திலேயேமுதன் முதலாகத் தோன்றிய ''ஆதி சங்கீத சாகித்ய கர்த்தா'' திருஞானசம்பந்தர்தான் என்று, சென்னைப் பல்கலைக் கழகத்தின் இசைப் பேராசிரியரான திரு. டாக்டர் சாம்பமூர்த்தி ஐயர் அவர்கள் கூறியிருக்கின்றார்கள்.

## சாகா வரம்பெற்ற தமிழ்ப் பாடல்கள்

தயவு செய்து இன்றைக்கு நாம் ஒரு புதிய உணர்வோடு, புதிய ஆராய்ச்சிகளிலே ஈடுபட்டாக வேண்டும். இந்தப் பழைய இலக்கியங்களை, பழைய இசைமரபுகளை, தேவார திருவாசகங்களை நாம் பழைமை என்று ஒதுக்கிவிட்டதனாலேதான், நமக்குப் பல உண்மைகள் தெரியாமல் போய்விட்டன. அவற்றை இன்று மக்கள் மத்தியிலே கொண்டுவர வேண்டும். அப்படியே ஆண்டவனைப் பற்றித்தான் பாடியிருக்கிறார்கள் என்றால், ஆண்டவனைப் பற்றிய பாடல்கள்தான் உலகில் நிலைத்து நிற்கின்றன. இன்றைக்கும் தியாகையர் பாடல்

களைப் பாடும்போது, அவர் இராமனை வேண்டிப் பாடுகின்ற காரணத்தினாலேதான் அந்த உருக்கத்தோடு, அந்த இசையும் அந்த கீர்த்தனைகளும் இன்றைக்கும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. அருணாசலக் கவிராயருடைய இராமநாடகக் கீர்த்தனை ,கோபால கிருஷ்ணபாரதியினுடைய நந்தனார் கீர்த்தனைகள், இப்படி உலகத்திலே ஆன்மிகத்தின் அடிப்படையில் சொல்லப்பட்ட கருத்துக்களே என்றைக்கும் சாகாவரம் பெற்றிருக்கின்றன. காலத்துக்கு ஏற்றவாறு கருத்துக்கள் தோன்றலாம். அந்தப் பிரச்சனைக்குப் பின்னாலே அவை தீர்ந்துவிடலாம். ஆனால் இந்தப் பிரச்னை உலகம் தோன்றிய காலத்திலேயிருந்து, அழிகின்ற காலம்வரை இருக்கிறது. இந்த ஆன்மீக உணர்வுகளை யாராலும் அழிக்க முடியாது.

## ஆன்மீகம்:

இன்றைக்கு நாம் பழமை பழமை என்று எல்லாவற்றையும் புறக்கணித்து விட்டோம். அந்தக் குற்றத்திற்கு நாம் இன்று தண்டனை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். வேறு எங்கேயும் தண்டனை இல்லை. நாம் பெற்ற பிள்ளைகளே, நமக்குத் தண்டனை வழங்கிக்கொண்டிருக்கிறார்கள். நாம்பெற்ற பெண்களே, தண்டனை வழங்கிக் கொண்டிருக்கிறார்கள். பண்பு என்பதை இன்னது என்று தெரியாமலே, அவர்களை வளர்த்துக் கொண்டிருக்கிறோம். அதற்குப் பெயர் நாகரீகம் என்கிறோம். அறிவு வளர்ச்சி என்கிறோம். சிறந்த மனிதனாக இருப்பது வேறு, சிறந்த அறிஞனாக இருப்பது வேறு. விஞ்ஞானியாக இருப்பது வேறு, பண்பாளனாக இருப்பது வேறு. ஆகவே பண்பாளர்களை உருவாக்குவதுதான் ஆன்மீகம். ஒருவனைச் சிறந்த மனிதனாக உருவாக்குவதுதான் ஆன்மீகம். இந்த ஆன்மீகத்துக்குள்ளே யிருந்து தான் விஞ்ஞானம் வளருகிறது. மெய்ஞ்ஞானத்துக்குள்ளேயிருந்துதான் விஞ்ஞானம் வருகிறது. விஞ்ஞானிக்கு எங்கே சந்தேகம் வருகிறதோ, அங்கே மெய்ஞ்ஞானி தோன்றுகிறான். விஞ்ஞானம் எங்கே தோன்றுகிறதோ, அங்கே மெய்ஞ்ஞானமும் தோன்றுகிறது. இது உலகத்திலே ஒரு ஆராய்ச்சிமிக்கவர் (Albert Einstein) சொன்ன சிறந்த வார்த்தை. ஆகவே இதை எந்தக் காரணங்களினாலும் ,எந்தச் சூழ்நிலையிலும் நாம் மறக்கக் கூடாது.

## தமிழ் இலக்கியங்கள்:

பல தொன்மைமிக்க கருத்துக்களை, மிகச் சிறந்த இலக்கியங்களை, சான்றோர்களுடைய வரலாறுகளை, இன்று அழித்து ஒதுக்கிவிட்டோம். இன்றைக்கு மீண்டும் காலத்தினுடைய கட்டாயம் காரணமாக இன்று நாம் அதைத் தேடி அலைந்து கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறோம். ஒரு டாக்டர் உ.வே. சாமிநாதையர் கிடைக்கவில்லையானால், சங்க இலக்கியங்கள் என்று பெருமைப்படுகின்றோமே, அவைகள் இன்றைக்குக் கிடைத்திருக்குமா? காலத்தின் தூதுவனாக அவர் வந்தார். அதனாலே இன்று தமிழ்ச் சமுதாயம் பெருமைப்பட்டுக் கொண்டு இருக்கிறது.

அதேபோன்று சேலம் ஜெயலட்சுமியைப் போன்ற அருமைச் சகோதரிகள், தாமே இன்று முன்னின்று தம்முடைய காலிலே இந்த முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறார்கள். இதற்கு அறநிலையத்துறையினுடைய முழு ஆதரவும், தமிழ்ச் சமுதாயத்தினுடைய துணையோடு அவர்களுக்கு இருக்கும். ஏனெனில் இவ்விழா அவர்களுக்குப் பெருமை சேர்ப்பது அல்ல, தமிழுக்குப் பெருமைசேர்ப்பது, தமிழைக் காப்பது. ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழைக் காக்கின்ற அந்த இலக்கியங்களை நாம் விட்டுவிட்டால் அது நமக்கு அளவிட முடியாத ஒரு மாபெரும் இழப்பாகும். அந்த இலக்கியங்கள் தோன்றிய காரணத்தினாலேதான், வள்ளலார் தோன்றினார். மகாகவி பாரதி தோன்றினார். பாரதிதாசன் தோன்றினார். நாமக்கல் கவிஞர், தேசிகவிநாயகம் பிள்ளை தோன்றினார்.

## குதர்க்கம் பேசிப் பயனில்லை

வித்து இல்லாமல் மரம் எப்படி வரும்? மரம் இல்லாது விழுது எப்படி பதியும்? ஆகவே வித்தை நாம் காப்பாற்றியாக வேண்டும். வித்தை நாம் மதித்தாக வேண்டும். வித்தில்லாமலே மரம் வந்துவிட்டது என்று நாம் விவாதத்துக்குச் சொல்லிக் கொண்டிருக்கலாம். நடத்திக் காட்டுங்கள் என்றால்-எங்களைப் போன்றவர்கள் அப்படித்தான் சில நேரங்களில் கேட்டோம் -சில அற்புதங்களைச் சொல்லுகின்றபோது, செய்து காட்டுங்கள், பார்க்கலாம் என்று மடக்கிக் குறுக்குக் குதர்க்கக் கேள்விகள் போடுவது, எங்கள் வழக்கம்.

நான்கூடக் காஞ்சிப் பெரியவரின் 91ஆவது பிறந்தநாளிலே கலந்து கொண்டு பேசுகிறபொழுது, அங்கேஒருவர் ஒரு கருத்தைச் சொன்னார். பாண்டிச்சேரியைச் சார்ந்தஅவர் நான்கு, ஐந்து வயதுவரை அவருடைய பெண்குழந்தை பேசாமலிருந்தது. அவருடைய மனைவியார் நீங்கள்அடிக்கடி காஞ்சிப் பெரியவரைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே. அவரிடம் இதைப்பற்றி ஒரு விவரமாவது கேட்கக்கூடாதா? அவருடைய கருணையைப் பெறக்கூடாதா? பேசாமல் இருக்கிற நம் பெண்செல்வம் பேசக்கூடாதா? என்று. அதற்கு அவர் சொல்லியிருக்கிறார், நம் குழந்தை இயற்கையாக ஆண்டவன் அருள் இருந்தால் பேசட்டும். நாம் என்ன செய்ய முடியும்? ஏனெனில் பார்க்க வேண்டிய மருத்துவமெல்லாம் பார்த்தாகிவிட்டதே! என்றாராம்.

ஆனால் அவர் ஒரு நாள் காஞ்சிப் பெரியவரைச் சந்தித்தாராம். சந்திக்கும் போது இக்குழந்தை நான்கு ஐந்து ஆண்டு ஆகிவிட்டது. பேசவில்லை. பேசமுடிய வில்லை. என் மனைவி இக்குழந்தைக்குப்பேசும் சக்தி வரக்கூடாதா என்று, தங்களிடம் கேட்கச் சொன்னாள் என்றார். அதற்குப் பெரியவர் கேட்கிறார். அதில் உமக்கு அக்கறை இல்லையா என்று. மனைவி விரும்பினால், நானும் விரும்பு கின்றேன் என்றுதான் பொருள் என்று பதில் சொல்லுகிறார். அப்படியானால், சரி. 'அது பேசும் போ' என்று அவர் சொல்லிவிட்டார். ஆனால் அது அங்கே பேசவில்லை. வீட்டிற்கு வந்த பிறகு அந்தக் குழந்தை பேசிய அற்புதத்தை நேற்று ஆயிரக்கணக்கானவர்கள் முன்னிலையில், அவர் மந்திர தந்திரம் அல்ல, மாயாசாலமும் அல்ல. வித்தைகள் காட்டுபவரும் அல்ல, சித்தரும் அல்ல, ஆனால் நடந்த அனுபவத்தைக் கூறினார். இதைச் சொன்னால் எங்களைப் போன்றோர், ''அப்படியானால் பேச முடியாத ஊமைகளை எல்லாம் காஞ்சிப் பெரியவரிடத்திலே அனுப்பிவிடுவோமா'' என்று கேட்போம். பின்னால் எங்களைக் கேட்பதற்கு யாராவது முனைவாரேயானால் நாங்கள் என்ன பதில் சொல்லுவோம் என்பது அப்போது எங்களுக்கே தெரியாது. காஞ்சிப் பெரியவரிடம் எல்லாவற்றையும் அனுப்பிவிட்டு, அது குணமாகவில்லை என்றால், அவர் சொன்னதும் பொய்யாகிவிட்டது என்று, எங்களை நாங்களே திருப்திப்படுத்திக் கொள்ள முடியும்; அல்லது உங்களை நீங்களே திருப்திப்படுத்திக் கொள்ள முடியும்.

## இறைவனே நலப்படுத்துகின்றார்:

வைத்தியரிடம் போகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவரிடம் செல்லுகிறவனுடைய வியாதிகள் எல்லாம் குணமாகிவிடுகிறதா? எல்லோரும் பிழைத்துக்கொள்ளுகிறார்களா? அவ்வளவு பேரும் பேசுகிறார்களா? அவ்வளவு பேருக்கும் கண்பார்வை வந்துவிடுகிறதா? வைத்தியரே என்ன செய்கிறார்? மருத்துவமனையில் சேர்ந்த பிறகு, ஆபரேஷன் தியேட்டருக்குள் அந்த வியாதியஸ்தனை அனுப்பிவிட்டு, உள்ளே நுழைவதற்கு முன்னாலே மருத்துவர் இறைவனை வணங்கிவிட்டுத்தான் உள்ளே போகிறோர். ஆபரேஷன் எல்லாவற்றையும் முடித்துவிட்டு வெளியே வருகிறார். இங்குப் பதட்டத்தோடு நின்றிருக்கும் பெற்றோர் கேட்கின்றார்கள். ஐயா என்ன ஆயிற்று என்று. நான் என் திறமையை எல்லாம் காட்டி, என் கடமையை முடித்துவிட்டேன். இனிமேல் கடவுள் பொறுப்புதான் என்று சொல்லி விட்டுப் போகிறார். ("Doctors merely treat, but God alone heals and saves"). இதுதான் இன்று நடந்து கொண்டிருக்கிறது. ஆகவே, அப்படிப்பட்ட அற்புதங்கள் எல்லாம் நடந்ததா? நடக்கவில்லையா? என்று சர்ச்சைகள் செய்வதில் பயனில்லை.

இங்கேகூட இவர்கள் ஒரு பட்டியலைப் போட்டுக் காட்டினார்கள். திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணுருவாக்கினார்; வேதாரண்யத்திலே மூடியிருந்த கோயிற் கதவைத் திறக்க வைத்தார். பாம்புகடித்து இறந்தவனைஎழுப்பினார்; முயலகன் என்னும் கொடிய நோயைத் தீர்த்தார் என்றெல்லாம் கூறினார்கள். நாம் இந்த ஆராய்ச்சிக்குள்ளே நுழைய வேண்டாம். ஆனால் அவருடைய இன்னொரு வாழ்வியற் பகுதி இருக்கிறது. அதை நாம் மறைத்து விட்டோம். மறந்துவிட்டோம். சான்றோர்களின் வீர வரலாற்றை, தியாக வரலாற்றை, புராணங்களாக மாற்றிவிட்டோம். இதிகாசங்களாக மாற்றிவிட்டோம். அவர் தமிழ் ஞானசம்பந்தராக மாறிய கதையை இந்த நாட்டு மக்களுக்கு எடுத்துச் சொல்லவில்லை. அவர் தமிழுக்குத் தந்தபல அடைமொழிகளை இந்த நாட்டு மக்களுக்கு எடுத்துச் சொல்லவில்லை. பதினைந்து பதினாறு வயதுக்குள்ளே இரு தாளங்களோடு மட்டுமே, இந்த நாடு முழுவதும் சுற்றித் தமிழையும் சைவத்தையும் வளர்த்து, தமிழ்க் கலைகளையும் தமிழ்ப்பண்பாட்டையும் வளர்த்துத் தந்தாரே, அந்தப் பெருமையைச் சொல்லவில்லை. என்ன மிஞ்சியது? இங்கே இருக்கின்ற அற்புதங்கள் மிஞ்சியது. இன்றைக்கு அற்புதங்கள் நிகழவில்லையானால், மக்கள் நம்ப மாட்டார்கள். ஆகவே அற்புத சக்தியும் வாழ்வில் அமைந்து சிறந்துள்ளன. அதனாலேதான் சித்தர்களும் பிழைத்துக் கொண்டிருக்கிறார்கள், சித்து வேலைக்காரர்கள் பலபேர். ஆகவே மக்களைத் திசை திருப்புகிற காரியமும் நடந்து விட்டது. உண்மையை உணர்த்துகிற அந்தக் காரியத்திலிருந்தும் நாம் தவறிவிட்டோம். ஆகவே அப்படிப்பட்ட ஓர் உணர்வை இந்த விழாக்கள் நாட்டு மக்கள் மனத்திலே ஏற்றியாக வேண்டும்.

## தமிழ்ச் சமுதாய விழா

தமிழ் இசை என்பதும், தமிழ் இசைவிழா என்பதும், திருஞானசம்பந்தர் விழா என்பதும், தமிழ்ச் சமுதாயத்தினுடைய விழாவாக எல்லோரும் ஏற்றுக் கொண்டாக வேண்டும். திருஞானசம்பந்தர் பிராமணனாகப் பிறந்தவர் என்று, உடனே எங்களுக்கு அதிலொரு திருப்தி, அதிலே ஒரு வெறுப்பு, அவர் பிராமணரா? பிராமணராக இருந்து தமிழுக்காகப் போராடிய அந்தத் தலைவரை, திருநீலகண்ட யாழ்ப்பாணரை, எந்த ஜாதிவேறுபாடும் இல்லை என்று சொல்லித் தன் பக்கத்தில் வைத்துக்கொண்டிருந்த அந்தத்தலைவரை, இன்றைக்கு இவ்வளவு நூற்றாண்டுகளுக்குப் பிறகும் அவர் பிராமணர், அதனாலே அவர்

சிறப்புகள் மறைந்துவிடும் என்று சொல்லுகிற உணர்வு வந்தால், அது மனித உணர்வுஅல்ல; அது மனிதப் பண்பு அல்ல.

## சமயம் எது?

நல்லவர்களை வாழ்த்தக் கற்றுக் கொள்ள வேண்டும். அதைத்தான் பேரறிஞர் அண்ணா எங்களுக்குக் கற்றுத்தந்தார். 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு' என்று அவர் அடுக்கு மொழிக்காகச் சொல்ல வில்லை. எங்கே இருந்தாலும் சிறப்பு, அதைப் பாராட்டியாக வேண்டும். சிறப்புக்குரியவர் களைப் பாராட்டியாக வேண்டும். அப்படிப் பட்ட சிறந்த மிகப்பெரிய சான்றோர்கள், தமிழ் வளர்த்த சான்றோர்கள், சமயம் வளர்த்த சான்றோர்கள் பலரையும் நாம் போற்றிச் சிறப்புச் செய்யவேண்டும். சமயம் என்றாலே மூடநம்பிக்கையல்ல, சமயம் என்றால் சமைப் பது ,மனிதப் பண்பை உருவாக்குவது, மனிதர் களைப் பண்பாளர்களாக மாற்றுவது என்பது பொருள். அதிலேயிருந்து இன்றைக்குச் சமயம் மாறியிருக்கலாம். அது இடைக் காலத்திலே ஏற்பட்ட விபத்து! அது நம்முடைய குற்றமே தவிர, சமயத்தின் குற்றம் அன்று. அந்த விபத் துக்களுக்காக சமயத்தை நாம்நொந்துகொண்டு பலன் இல்லை. அதை மாற்றியாக வேண்டும்.

## முடிவுரை:

ஆகவே இப்படிப்பட்ட பல நல்ல இலக்கிய உணர்வோடு, இந்த விழாவை எடுத்துத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கிற நம் முடைய அருமை டாக்டர் சேலம் ஜெயலட்சுமி அவர்களை மனமார வாழ்த்திப் பாராட்டி, தமிழ்ச் சமுதாயம் இனிமேலாவது ஒரு புதிய உணர்வோடு, புதிய கோணத்தில் இந்தப் பிரச்சினைகளை அணுகவேண்டும் என்றுகேட்டு, இந்த மூன்றுநாள் விழாவைத் தொடங்கி வைக் கிற வாய்ப்புக் கிடைத்ததை உண்மையி லேயே நான் பெருமையாகக் கருதி, உங்களிட மிருந்து விடைபெறுகிறேன், வணக்கம். * * *



மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலைச் சார்ந்த அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் மகளிர் மேல்நிலைப்பள்ளியில், கூடுதல் வகுப்பறை மற்றும் புதிய ஆய்வுக்கூடக் கட்டிடத் திறப்பு விழா, 8-7-84ந் தேதி காலை 11 மணிக்கு தெப்பக்குளம் அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் திறந்த வெளியரங்கில் நடைபெற்றது. இந்தப் புதிய கட்டிடத்தினைத் தமிழ்நாடு செய்தி அறநிலைய அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் திறந்து வைத்தார்கள். இவ்விழாவிற்குத் திரு கு. ஆளுடைய பிள்ளை, ஐ.ஏ.எஸ்., (ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை) அவர்கள், தலைமை வகித்தார்கள். வணக்கத்திற்குரிய மதுரை மாநகராட்சி மேயர் திரு. எம்.பட்டுராஜன், பி.ஏ.,பி.எல்., அவர்கள் முன்னிலையில் இந்தத் திறப்புவிழா நடைபெற்றது. விழாவிற்கான ஏற்பாடுகளை இத்திருக்கோயில் தக்கார் திரு வி. என். சிதம்பரம் அவர்களும், உதவி ஆணையர் / செயல் அலுவலர் திரு எஸ். கனகய்யா, பி. எஸ்ஸி.பி.எல்., அவர்களும் செய்திருந்தார்கள்.

# திருஞானசம்பந்தர் இசைவிழாவில் சிறப்புரை

மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள்
கல்வி அமைச்சர்

இந்த விழாவின் மதிப்பிற்குரிய தலைவர் திரு. ஆளுடையபிள்ளை அவர்களே, மாண்புமிகு மதிப்பிற்குரிய ஆர். எம். வீ. அவர்களே, மதிப்பிற்குரிய நடிகமணி டி. வி. என். அவர்களே, சென்னை நகர செரீப் மதிப்பிற்குரிய சரோஜினி வரதப்பன் அவர்களே, இந்த இசை விழாவை மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்து நடத்திக் கொண்டிருக்கிற டாக்டர் சேலம் ஜெயலட்சுமி அவர்களே, ஓதுவா மூர்த்திகளே அறிஞர் பெருமக்களே, பெரியோர்களே, தாய்மார்களே, நண்பர்களே!

திருக்கழுக்குன்றத்திலே திருஞானசம்பந்தர் பெயரால் தமிழ் இசைவிழா நடத்த ஏற்பாடு செய்து, அதில் என்னைக் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்ட பெரியோர்களுக்கு என்னுடைய மகிழ்ச்சியையும் நன்றியையும் நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மூன்றுநாள் விழாவுக்கு இங்குச் சிறப்பான ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள். தமிழகத்தினுடைய பல்வேறு பகுதிகளிலிருந்தும், ஆர்வம் கொண்டவர்களும் ஈடுபாடு கொண்டவர்களும், இங்கே வந்து குழுமியிருக்கிறீர்கள். இந்த விழா சிறப்பாக நடைபெறுவதற்காக டாக்டர் சேலம் ஜெயலட்சுமி அவர்களும், இந்த வட்டத்துச் சட்டசபை உறுப்பினர் ஆனூர் ஜெகதீசன் அவர்களும், இந்தக் கோயிலினுடைய நிர்வாகத்தை ஏற்று நடத்திக் கொண்டிருக்கின்ற பெரியவர்களும், இந்த ஏற்பாடுகளை எல்லாம் மிகச் சிறப்பாக இப்போது நடத்திக் கொண்டிருக்கின்றனர். இந்த விழாவிலே கலந்து கொள்வதன் மூலம், நாம் நம்முடைய தமிழ் இசைக்கு ஒரு மிகப் பெரிய ஆதரவினை, மிகப் பெருமையைச் செய்கின்ற வாய்ப்பை நாம் பெற்றிருக்கிறோம்.

எனக்கு முன்னாலே பேசிய மாண்புமிகு அறநிலைய அமைச்சர் அவர்கள், மிகச் சிறந்த கருத்துக்களை எல்லாம் எடுத்துப் பேசியிருக்கின்றார்கள். அதற்கு முன்னாலே பேசிய பெரியவர்களும் பல்வேறு கருத்துக்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இந்த திருக்கழுக்குன்றத்தில் அப்பரும் வந்து பாடியிருக்கின்றார். சுந்தரரும், பாடியிருக்கின்றார். மாணிக்கவாசகரும் வந்து பாடியிருக்கின்றார். திருஞானசம்பந்தரும் வந்து பாடியிருக்கின்றார். நால்வரும் வந்து பாடிய இந்தத் திருத்தலத்தில் இன்று திருஞானசம்பந்தர் பெயரால் விழா நடத்துகின்ற பெருமையைப் பெற்றிருக்கின்றோம். இந்த விழாவில் தேவார திருவாசகங்கள், அதிலே காணப்படுகின்ற பாடல்களைப் பாட இருக்கின்றார்கள். நீங்களும் கேட்க இருக்கின்றீர்கள். திருக்கழுக்குன்றத்தைப் பொறுத்த மட்டில் நிறையப் பாடல்களால் போற்றப் பெற்றிருக்கிறது.

நம்முடைய தமிழ் மொழியில் தேவாரம், திருவாசகம் போன்ற பக்திப் பாடல்கள் பல்லாயிரக்கணக்கிலே இருக்கின்றன. அவைகளைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நான் சொன்னதாக ஒரு கருத்தை அறநிலையத் துறை அமைச்சர் குறிப்பிட்டார்கள். தேவாரப் பாடல்களும், திருவாசகப் பாடல்களும் இசையரங்குகளிலே பாட, அதைப் பொதுமக்கள் விரும்பிக் கேட்கின்ற அளவிற்கு ஒரு நிலைமை ஏற்பட வேண்டும் என்று, நான் முன்பு ஒரு முறை சொன்னதை அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். அப்படிப்பட்ட ஒரு நிலைமை ஏற்படுகின்றபோது தான், அது தமிழுக்கும், தமிழ் இசைக்கும் செய்கின்ற ஒரு நல்ல காரியமாக இருக்குமென்று நான் நம்புகின்றேன். ஆனால் அது நடைபெறாததற்கு மிக முக்கியமான காரணம், இந்த நாட்டிலே பக்தி குறைந்து விட்டது என்பது அல்ல. தமிழனாகப் பிறந்தும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டும், நம்மிற் பெரும்பாலோர் அந்தத் தமிழைப் படிக்காத காரணத்தினாலேதான், இன்றைக்கு இத்தகைய பாடல்களைப் படிக்கவும், பாடக் கேட்கவுமான தகுதியைப் பெரும்பாலான

மக்கள் பெறாமலிருக்கின்றார்கள். இன்றைக்கு நம்முடைய கணக்குப் பிரகாரம் பார்த்தால் கூட, 100க்கு 54 பேருக்கு மேல் கையெழுத்துக்கூடப் போடத் தெரியாத அளவிற்கு, தமிழ் தெரியாதவர்களாக இன்றைக்கும் இருந்து கொண்டிருக்கிறார்கள். நாம் ஆட்சிப் பொறுப்பிற்கு வந்த பிறகு, புரட்சித் தலைவருடைய ஆணைக்கு உட்பட்டு முதியோர் கல்வி என்ற அமைப்பை, நாம் தீவிரமாகச் செயல்படுத்த ஆரம்பித்த பிறகுதான், ஒரு அளவிற்குப் பல்வேறு பகுதியிலேயும், தமிழைத் தெரிந்து கொள்ளக்கூடிய அளவிற்கு ஒரு தகுதியை ஏற்படுத்திக் கொண்டு வருகின்றோம். அதற்காக மாநில அரசுக்கு, மத்திய அரசு பரிசுகூட வழங்கியிருப்பதைப் பத்திரிகைகளில் நீங்கள் பார்த்திருப்பீர்கள்.

ஆகவே முதலிலே தமிழைப் பரப்பினால் தான், அதன் பிறகு தமிழ்ப் பண்பாட்டைத் தெரிந்து கொள்ளவும், தமிழ் இசையைத் தெரிந்து கொள்ளவும், தகுந்த நிலைமை ஏற்படும் என்று நாம் உணர்கிறோம். அப்படி தமிழ் பரவுகின்ற நேரத்தில், தமிழ் தெரிந்தவர்கள் அதிகமாக ஆகின்ற நேரத்தில், இத்தகைய இசை நிகழ்ச்சிகள் ஏராளமாக நடைபெற வேண்டும். அதிலே தமிழ் அறிஞர்கள் இசைப் பாக்களை மிகுதியாக இயற்ற வேண்டும். அப்போதுதான் நம் கலாச்சாரத்தையும் நம்பிக்கையையும் அதன் மூலமாகத் தெரிந்து கொள்ளக் கூடிய வாய்ப்பைநாம் பெற முடியும்.

இன்றைக்குக்கூட கர்நாடக இசை என்றும், தியாகராஜர் கீர்த்தனை என்றும், சியாமளா சாஸ்திரிகள் கீர்த்தனை என்றும், அவைகளெல்லாம் வேறு மொழியிலேதான் இருக்கின்றன என்றும் சிலர் பேசுகிறபோது, தமிழிலே பாடல்கள் இருக்கின்றனவா, தமிழ் இசை என்று ஒன்று இருக்கின்றதா? அது நம்முடைய கலாச்சாரத்திற்கு உட்பட்டிருக்கிறதா? நாம் இத்தனை ஆண்டுகால பாரம்பரியத்தை உடையவர்களாக இருக்கின்றோமே, நமக்கென ஒரு இசை இல்லையா என்றகேள்வி, இன்று சாதாரண மக்களிடையே தோன்றுமானால் ஆச்சரியப்படுவதற்கில்லை. காரணம், அவர்கள் தெரிந்து கொள்ளுகின்ற அளவிற்கு, ஒரு பெரிய முயற்சியை, நல்ல முயற்சியை நாம் இன்னும் எடுத்தாக வேண்டும். கிராமங்களிலே இருக்கின்ற மக்களும், தொலை தூரத்தில் இருக்கின்ற மக்களும், தமிழ் மக்கள் எங்கெங்கு இருக்கின்றார்களோ அங்கெல்லாம், தமிழிசை பரவுவதற்கு ஒரு சிறந்த பணியினை நாம் செய்தாக வேண்டும்.

இன்றைக்கு இந்த விழாவைக் கொண்டாடுவதன் மூலம் டாக்டர் சேலம் ஜெயலட்சுமி அவர்கள், தமிழுக்கும் தமிழ் இசைக்கும், தமிழ்க் கலாச்சாரத்திற்கும் மிகப்பெரிய சேவையைச் செய்து கொண்டிருக்கிறார்கள். அவருடைய திறமையையும், தமிழ்ப் பண்பையும் நாம் பாராட்டுகின்றோம். இந்த சேவை மனப்பான்மையையும் நாம் பாராட்டுகின்றோம். இதற்கு உங்களைப் போன்றவர்களுடைய ஆதரவு இருக்குமேயானால், இந்த முயற்சி நாடு தழுவிய ஒரு முயற்சியாகவளர்ந்து அது பலன்தரும் என்று கருதுகின்றேன்.

தமிழைப் பொறுத்தமட்டில் இன்றைய தினம், தமிழ் மொழியானது ஒரு சிறந்த மொழியாக, பல்லாயிரம் ஆண்டுகளாக இருந்துவரும் ஒரு மொழியாக, நாம் இன்றைக்கு எடுத்துப் பேசி வருகின்றோம். சமஸ்கிருதத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றபோது, இன்று சமஸ்கிருதம் ஒரு கிளாசிக்கல் (classical) மொழியாக, உயர்தனிச் செம்மொழியாக மத்திய அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால் அதைப் போன்ற ஒருநிலைமை தமிழுக்கு வரவேண்டும் என்று, தமிழகஅரசின் சார்பாக நாம் கேட்டுக் கொள்ளுகின்றோம். சமஸ்கிருதம் எத்தனை ஆண்டுகாலமாக இருந்து வருகின்றதோ, அதே அளவு பல்லாயிரக்கணக்கான ஆண்டுகாலமாக இருந்து வருகிற ஒரு மொழி தமிழ்மொழியாகும். சமஸ்கிருதத்திலே இல்லாத பெருமை தமிழுக்கு உண்டு. இன்று சமஸ்கிருதம் பேசப்படாத ஒரு மொழியாக இருந்து வருகிறது. தமிழோ பல கோடிக்கணக்கான மக்களால் பண்டுதொட்டு இன்று வரை உயிர்ப்பாற்றலுடையதாக நின்று நிலவிப் பேச்சு வழக்கிலும், நூல் வழக்கிலும் விளங்கி வருகின்றது. சமஸ்கிருதத்திலே இல்லாத அளவிற்கு, தமிழிலே தேவாரம், திருவாசகம் போன்ற தெய்விகப் பாடல்கள் மட்டுமல்ல, சைவ - வைணவ - சாக்தமத இலக்கியங்கள் மட்டுமல்ல, இஸ்லாமிய சகோதரர்களாலே இயற்றப்பட்ட இஸ்லாமிய இலக்கியமும் உண்டு, கிறிஸ்துவ மதத்தாலே செய்யப்பட்ட இலக்கியங்களும் உண்டு. புத்தமதம், சமண மதத்தாலே செய்யப்பட்ட இலக்கியங்களும் உண்டு. பல்வேறு மதத்தைச் சார்ந்தவர்களும் படைத்த இலக்கியங்களைப் பெற்ற ஒரு பழமையான மொழியாக இன்றைக்குத் தமிழ் இருந்து கொண்டிருக்கிறது. அந்த அடிப்படையில் தமிழுக்கு உரிய பெருமையை மைய அரசு தந்தாக வேண்டும் என்று நாம் நம் அரசின் சார்பிலே கேட்டுக் கொள்ளுகின்றோம்.

அந்தப் பெருமையைத் தருவதன் மூலம் இன்றைக்குத் தமிழைப் பற்றியும் தமிழ் இலக்கியம் பற்றியும் தெரிந்து கொள்ளக் கூடிய ஒரு வாய்ப்பை நாம் மட்டுமல்ல, மற்ற மொழி பேசுகின்றவர்களும், அதைப் பெற முடியும். இன்றைக்கு யுனஸ்கோ ஸ்தாபனத்தின் மூல

மாக, ஐக்கிய நாட்டுச் சபையினுடைய கல்வி கலாச்சார அமைப்பின் மூலமாக வெளியிடப் பெறுகின்ற 'கூரியர்' (Courier) என்னும் அமெரிக்க மாத இதழ், கடந்த மூன்று நான்கு ஆண்டுகாலமாக முயற்சி எடுத்துக் கொண்டு, தமிழ்ப் பண்பாடு பற்றி ஒரு சிறப்பிதழைச் சென்ற மாதம் வெளியிட்டிருக்கிறது. அதன் மூலமாக, இன்றைக்குப் பதினைந்து பதினாறு மொழிகளில் உலகம் முழுவதும் இருக்கின்ற மக்கள், தமிழைப் பற்றியும் தமிழ்ப் பண்பாட்டைப் பற்றியும் தெரிந்து கொள்ளக் கூடிய ஒரு பெரும் வாய்ப்பை, இன்றைக்கு நாம் ஏற்படுத்தியிருக்கின்றோம்.

ஆகவே உலகத்திலே இருக்கின்றவர்கள், தமிழ் பற்றியும், தமிழ்ப் பண்பாடு பற்றியும் தெரிந்து கொள்ள விரும்புகின்றபோது, நாம் நம்முடைய இலக்கியங்களைச் சொல்லுகின்றோம். அதைப் போலவே நமது இசையையும் எடுத்துச் சொல்ல வேண்டும். அதைத் தெரிந்து கொள்ளக் கூடிய மையங்கள், கேந்திரங்கள் நாட்டிலே பரவலாக இருந்தாக வேண்டும். அத்தகைய ஒரு முயற்சியைப் பலரும் எடுக்கின்றபோது, அவர்களுக்கு ஆதரவு தருகின்ற நல்ல உள்ளம் படைத்தவர்களாகத் தமிழ் மக்கள் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, இந்த விழா, ஆண்டுதோறும் தொடர்ந்து நடைபெறுகின்ற திருஞானசம் பந்தர் இசைவிழா, ஆண்டுக்காண்டு மெருகு பெற்று, ஆண்டுக்காண்டு சிறப்பினைப் பெற்று, மக்களால் ஆதரவு பெற்று, நல்ல பயனை விளைவிக்க வேண்டுமென்று, என்னுடைய விருப்பத்தைத் தெரிவித்து, இந்த விழாவுக்கு என்னை வரவழைத்தவர்களுக்கு, எனது நன்றியினைக் கூறி, என்னுடைய பேச்சை முடிக்கின்றேன். வணக்கம்.

***

# சீக்கிய மதக் குருமார்கள்

குருநானக் நிறுவிய சீக்கிய மதம், அவருக்குப் பின்னர்ப் பலரால் மேலும் தொடர்ந்து வளர்க்கப் பெற்றது. குரு அங்கதர் (கி.பி.1538-1552) என்பவர், பஞ்சாப் மொழிக்குரிய 'குருமுகி' என்னும் எழுத்து வரிசை ( Alphabet ) முறையினைத் திருத்தியமைத்து ஒழுங்குபடுத்தினார். குரு அமரதாசர் (கி.பி.1552-1574 )சீக்கிய சமூகத்தினைத் திரட்டி ஒன்றுப்படுத்தி வலிமைப்படுத்தினார். குரு ராமதாசர், அமிர்தசரஸ் ( Amristar ) என்னும் நகரத்தையும், அங்குள்ள புகழ்மிக்க பொற்கோயிலையும் தோற்றுவித்தார். குரு அருச்சுனர் (கி.பி.1581-1606), 'கிரந்த சாகிப்' என்னும் சீக்கிய மத வேதத்தை முதன்முதலில் தொகுத்தார். டெல்லி அரசனுடன் ஏற்பட்ட போரில் மாண்டார். குரு அரிகோவிந்தர் (1606-1638) தமது தலைமையின் அடையாளமாகக் கூர்வாள் இலச்சினையை (Badge) மேற்கொண்டார். சீக்கியர்களை வீரமும் போர்த்திறனும் மிக்க இனத்தினராக விளங்கும்படி செய்தருளினார். குரு அரிதாசர் (1638-1660), அவுரங்க சீப் என்னும் மொகலாய மன்னனுடன் போர் புரிந்தார். குரு அரிகிருஷ்ணர் (கி.பி.1660-1664), பல போர்களில் அஞ்சாமல் கலந்து கொண்டு, சீக்கிய மதத்தையும் இனத்தையும் காக்கப் பெரும் பணி புரிந்தார். குரு தேஜ்பகதூர் (கி.பி.1664-1673) என்பவரும், மொகலாயருடன் இடையறாது போர் புரிந்து ஒரு சிறந்த வீரராக விளங்கினார். இவரது பாடல்கள் பல, சீக்கிய வேதத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. குரு கோவிந்த சிங் (கி.பி.1675-1708) என்பவரே, சீக்கிய மதத்தின் பத்தாம் குருவும், இறுதிக் குருவும் ஆவார். சீக்கிய மதத்தை வீரம் செறிந்ததொரு சிறந்த மதமாக ( Militant Theocracy ) விளங்கும்படி செய்வித்தவர் இவரே. 'சிங்' (சிங்கம்) என்னும் பட்டத்தினை முதன் முதலில் தாம் சூடிக்கொண்டு, அதனை எல்லாச் சீக்கியர்களும் தங்கள் பெயருடன் சேர்த்து வழங்கிக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தி, அங்ஙனம் வழங்குவித்தவர் இவரே யாவர். சீக்கிய மதத்தின் தலைமையைத் தனக்குப் பின்னர்த் தனி ஒருவருக்கென இல்லாமல் 'கிரந்த சாகிப்' என்னும் வேத நூலுக்கே உரியதாக மாற்றினார். குரு பதவிக்குப் பதிலாக, கல்சா (Khalsa) என்னும் பெயரில், சான்றோர்களின் பேரவையினை இவரே நிறுவினார்.

—ஆசிரியர்

# கவியரசர் கம்பர்

திரு. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், M.A., Ph.D.,

இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-113.

கம்பர் உலக மகா கவிஞர்; தமிழ்க் கவிச் சக்கரவர்த்தி; காப்பியக் கவிஏறு; சந்தக் கவிக் கொண்டல்; கற்பனைக்கோர் கொள்கலம்; அணிகளுக்கோர் இருப்பிடம்; கலைகளுக் கோர் கவின்களம்; கருத்துக் குவியல்களின் களஞ்சியம்; அறிவுகட்கு அடைக்கலம்; உணர்வுகட்குப் புலப்பாடு; உலகியலுக்கு உறு துணை; அன்பிற்கோர் ஆசான்; ஆற்றலுக்கு எடுத்துக்காட்டு; அறத்துக்கு அரண்; ஆசைக்கு எல்லை; நன்றிக்கு வித்து; எழுத்துக்குஉருவம்; சொல்லுக்கு அகராதி; பொருளுக்கு விளக்கம்; கவிதைக்கு உரைகல்; பண்பாட்டுக் குக் கண்ணாடி; படைப்பில் இறைவன்; வரையாது அளிப்பதில் வள்ளல்; புலவருக்கு வழி காட்டி; கல்விக்கு ஒளி; இயலுக்கு இலக்கணம்; இசைக்கு இன்னியம்; நாடகத்துக்கு மேடை; பண்புக்கு இலக்கியம்; புலமைக்கு அடையாளம்; இன்பத்துக்கு ஐம்புலன்; வடிவத் திற்கு வரைபடம்; வெளியீட்டிற்கு ஆதாரம்; அடக்கத்திற்கு நிறைகுடம்.

இவ்வாறு, புகழின் உறைவிடமாக அமைந்து மக்களில் வேறுபட்டு, மாந்தரில் உயர்ந்து நின்றதால் இவன் மனிதனோ; தேவனோ என்ற ஐயம் நீக்குவதுபோல், 'கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்ததும்' (சுயசரிதை 24) எனக் கூறுகின்றான் பாரதி. பின்னும், தமிழ் நாட்டின் கல்வித் தரத்துக்கு எடுத்துக் காட்டாய்க் கம்பர் துலங்குகின்றார் என்பதை,

> கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
> கம்பன் பிறந்த தமிழ்நாடு (20:60)

எனப் புலப்படுத்துகின்றான். அவனது உலகளாவிய பெருங் கவித்துவத்தால், அவன் தமிழனாக மட்டும் நின்றுவிடாது உலகோனாக— உலகக் கவிஞருக்கே ஒரு முன் மாதிரியாகத் திகழ்கின்றான் எனவும் புலனாகின்றான்.

> ''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்,
> வள்ளுவர்போல், இளங்கோவைப் போல்;
> பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;
> உண்மை வெறும் புகழ்ச்சியில்லை'' (22:2)

இவ்வாறெல்லாம் பல்விதமாகப் போற்றப் படுவதற்குக் கர்ண பரம்பரைக் கதைகளோ புலவர் புராணமோ காரணமன்று. நிலைத்த புகழுடைய இராமாயணத்தை இராம காதையாகத் தமிழில் வடித்துத் தந்ததே காரணம். தேன் சொற்களால் அவனைப் புகழும் அடைகளுக்கெல்லாம் பிறப்பிடமான புனைவிடமான பகுப்பொருள் நிலையான அக்காப்பியம் அவன் பெயராலேயே கம்பராமாயணம் என்று இன்று போற்றப்படுகின்றது.

இது, தமிழ்க் காப்பியம், சமயக் காப்பியம், வாழ்வியல் காப்பியம். மொழியால் தமிழாக இருந்தாலும், கதையாலும் கலையாலும் கருத்தாலும் உலகளாவி நிற்கின்ற காப்பியம். தெவிட்டாத தெள்ளமுது; நறுமணமுடைய பொற்பூ; காட்சிக்குக் கவின் பொழில்; செவிக்குத் தம் மக்கள் மழலை; ஊற்றுக்குத் தண் புனல்.

> பொன்னின் சோதி போதின் நாற்றம்
> பொலிவே போல்
> தென்உண் தேனின் தீம்சுவை
> செஞ்சொற் கவிஇன்பம் (502)

எனக் கம்பன் கூறும் இலக்கணத்திற்கு ஏற்ற இலக்கியம். தொட்டனைத்தூறும் மணற்கேணி; நவில்தொறும் நயம்பயப்பது; அறிதொறும் அறியாமை காணற்கேற்பப் பல்பொருள் வளமுடையது; வற்றாத நன்னீர்க்கடல்; தோண்டத் தோண்டத் குறையாத சுரங்கம்; வாழ்வின் பன்னிறங் காட்டும் படிகம்; மாறாத இளமையில் மாறிவரும் புதுமை கொள்ளும் இயற்கை; பெருகிவரும் புதுப்புனல்; ஆழங்கள் புலப் படுக்கும் தெளிந்த நீரோடை.

எழுத்துக்கு இடமாகவும், சொல்லுக்கு ஆக்கமாகவும், மொழிக்கு வளமாகவும் பொருளுக்குப் புலப்பாடாகவும் அமைந்த இக்கவிதை மாளிகை, இப்பேருலகின் ( Macro-cosm ) ஒரு சிறுபடைப்பாக ( Micro-cosm ) அமைகின்றது. ஒரு சிறுதுளி நீரில் பேரண்டங்கள்

பிரதிபலிப்பதுபோல, இப்படைப்பில் உலகம் புலப்படுகின்றது.

கம்பன் படைப்பு, ஒரு மொழியினருக்கோ இனத்தினருக்கோ நாட்டினருக்கோ தனியுரிமை உடையதன்று; உலகம் முழுமைக்கும் பொதுவானது. இடத்தால் பரந்து நிற்கின்ற காப்பியம். காலத்தையும் வென்றமைந்து, எக்காலத்திற்கும் உரிய நடப்பியல் காப்பியமாகப் புலப்படுகின்றது. காலத்தைக் கடந்தமையும் அதன் தன்மை, கவிநயத்தால், கவிதை இன்பத்தால் மட்டுமின்றி, உலகியலோடு ஒட்டி - உறவாடி - இணைந்து உருவாகியதாலும்பொருந்தியுள்ளது.

பல்வித மனநிலையும் அறிவுநிலையும் உணர்வு நிலையும் உடையவர்களுக்குக் கம்பன் படைப்பு ஒருங்கிணைந்து விருந்தளிக்கின்றது. சிறுவருக்கு அதிசயமும் அற்புதமும் நிறைந்த வீரக்கதை கூறுகின்றது. இளைஞருக்கு அறிவின் பரப்பை ஆற்றலின் எல்லையைப் புகல்கின்றது. முதியோருக்கு உள்ளுந்தொறும் புத்துணர்வு அளிக்கின்றது. பக்தனுக்கு இறைவனின் திருஅவதாரமான இராமன் இயல்பைப் புகன்று பேரின்பச் சுவை நல்குகின்றது. ஆடவருக்கு அறிவுரை கூறுகின்றது. பெண்ணுக்கு வழிகாட்டுகின்றது. பொதுவாக மக்கள் அனைவருக்கும் மறத்தை நீக்கி அறத்துடன் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராக, மக்கட் பண்பு நிறைந்தோராக வாழும் வழியைப் போதிக்கின்றது. நல்லாரை, எச்சோதனை வரினும் நன்னெறியினின்று விலகாது தளராது ஆழ்ந்த பற்றுடன் முன்னேறச் செய்கின்றது. அல்லாரை நன்னெறியின்பால் ஆற்றுப்படுத்துகின்றது. இவ்வாறு எப்பருவத்தினருக்கும் எப்பாலினருக்கும் எப்பண்பினருக்கும் ஏற்புடைப் பாங்குடன் பொருந்தியமைகின்றது கம்பன் தரும் இராமாயணம்.

இறையவதாரத்தின் மீவியல் நிலையை மட்டும் புனைந்துநின்றிருந்தானாயின் கவிஞனின் படைப்பு நிலைபெற்றிராது. வாழ்வியலை உலகியலை விரவி, ஒன்றிலொன்று ஆழ்ந்து கலந்து, வேறுபடாது மயங்கி, இதனை ஒரு இயம்பியற் காப்பியமாக அமைத்துத் தந்தமை பற்றி, இது நீங்கா நிலைபேறு பெறுகின்றது. கதை கூறும் வெறும் பொழுதுபோக்கு இலக்கியமாக அமைக்காது, சமுதாயத்தின் பிரதிபலிப்பாக்கி, மக்களுக்குப் பயன்படும் உள்நிலை அமைத்து அளிக்கின்றான். சமுதாயச் சீர்திருத்த வழிகாட்டியாக, பயன் குலையாகப் படைத்தளிக்கின்றான். 'அறம் வெல்லும் மறம் வீழும்' எனும் உலக இயல்பினை ஐயமற உறுதிப்படுத்துகின்றான்.

கற்பனைக் கவினால் கற்போரைக் கவரும் கவிஞர் சிலர். உலகியலை உயிர்ப்பித்துஉயர்வு பெறும் புலவரும் உளர். ஆனால், கம்பனோ இரண்டன் இணைவைத் தருகின்றான். கற்பனையின் சிகரத்தில் நின்று, கலைஞரை மனத்தேரினில் அதன் உச்சிக்கே அழைத்து இன்புறுத்தும் அதே வேளையில் உலக இயற்கையினையும் 'ஓவியரின் ஓவியம் புதுக்கினர்' எனும்படி ஒளியுடன் வெளிப்படுத்துகின்றான். உலகியலில் வேரூன்றிய இவனின் கற்பனைச் சோலை கற்றோரிதயத்தைக் களிப்புறச் செய்கின்றது.

வடமொழியில் மூவர் வகுத்த இராமன் கதையை, வான்மீகி அளித்ததன் அடிப்படையில் படைத்ததாகக் கம்பன் தன் காவியத்தைச் சுட்டிலும் அது ஒரு முழுமையான புதுமைப் படைப்பாகவே அமைகின்றது. மொழிபெயர்ப்பாகவோ, மொழியாக்கமாகவோ அன்றி மறுபடைப்பாகக் காணப்படுகின்றது. தமிழனின் வாழ்வுக்கும், வழக்கத்துக்கும், பண்பாட்டுக்கும் மரபுக்கும், சொல் வழக்குக்கும், சூழ்நிலைக்கும் ஏற்ற ஆக்க உருவம் கொள்கின்றது. கம்பனின் தனித்தன்மை தெரியும்படியும், சிறப்பு வெளிப்படும்படியும், நன்றியுணர்வும் அடக்கமும் புலப்படும்படியும் வடிவம் கொள்கின்றது.

## மத்வாசாரியர் இயற்றிய நூல்கள் 37

1. கீதாபாஷ்யம்
2. கீதாதாற்பரியம்
3. பிரம்மசூத்திர பாஷ்யம்
4. அனுவியாக்கியானம்
5. அனுபாஷ்யம்
6. நியாயவிவரணம்
7. பாகவத தாத்பரியம்
8. மகாபாரத தாத்பரிய நிர்ணயம்
9. பிரமாணலட்சணம்
10. கதாலட்சணம்
11. உபாதி கண்டனம்
12. மாயாவாத கண்டனம்
13. பிரபஞ்ச மித்தியத்துவ அனுமான கண்டனம்
14. தத்துவ சங்கியானம்
15. விஷ்ணு தத்துவ நிர்ணயம்
16. தத்துவ விவேகம்
17. தத்வோத்யோதம்
18. கர்ம நிர்ணயம்
19.-28. தசஉபநிஷத வியாக்கியானங்கள்
29. ரிக்வேத வியாக்கியானம்
30. யமகபரதம்
31. நரசிம்ம நகஸ்துதி
32. கிருஷ்ணாம்ருத மகார்ணவம்
33. துவாதஸ ஸ்தோத்திரம்
34. தந்த்ரசார சங்கிரகம்
35. சதாச்சார ஸ்மிருதி
36. ஜயந்தீ நிர்ணயம்
37. யதிபிரணவ கல்பம்

# அத்வைத தத்துவம்

'வேதாந்த வித்தகர்'

திரு டி. எம். பி. மகாதேவன், M.A., Ph.D.

அத்வைதம் என்பது வேதாந்த மதங்களுள் ஒன்று. ''பிரமம் இரண்டற்ற மூலப் பொருள்; பலவாகக் காணப்படும் உலகம் பொய்த்தோற்றம்; சீவன் பிரமத்தைவிட வேறன்று'' என்று அத்வைதம் கூறுகிறது. அத்வைதம் என்ற சொல்லுக்கு இரண்டற்றது என்பது பொருள். ஆசாரிய சங்கரர் இம் மதத்தின் கொள்கைகளைத் தாம் வரைந்த நூல்களில் தெளிவாக விளக்கியுள்ளார். இம் மதம் அவர் இயற்றியதன்று. உபநிடதங்களில் பலவிடங்களில் அத்வைதம் போதிக்கப்படுகின்றது. முக்கியமாக யாக்ஞவல்கியரின் உபதேசங்களில் இதைக் காணலாம். சங்கரருக்கு முன் வந்த கௌடபாதர், அத்வைதக் கொள்கைகளை யுக்திகளைக் கொண்டு நிலைக்கச் செய்தார்.

ஏனைய வேதாந்த மதங்களைப் போல அத்வைதமும், மூன்று பிரஸ்தானங்களை மூல நூல்களாகக் கருதுகின்றது. அவையாவன; உபநிடதங்கள், பிரமசூத்திரம் பகவத்கீதை என்பன. கௌடபாதர் மாண்டூக்கிய உபநிடதத்திற்கு வியாக்கியானமாகக் காரிகையொன்றை இயற்றியுள்ளார். சங்கரர் முக்கியமான உபநிடதங்களுக்கும் மற்ற இரண்டு பிரஸ்தானங்களுக்கும் பேருரை எழுதியுள்ளார். அத்வைதத்தைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கி அவர் வரைந்துள்ள விவேக சூடாமணி, உபதேச ஸாகஸ்ரி முதலிய தனி நூல்களும் உண்டு. பிரகதாரணியகம், தைத்திரியம் முதலிய உபநிடதங்களுக்குச் சங்கரர் எழுதிய உரைகளுக்கு, அவருடைய சீடரான சுரேசுவரர் வார்த்திகங்கள் செய்துள்ளார். நைஷ்கர்ம்ய சித்தி என்பது சுரேசுவரருடைய மற்றொரு நூல். சங்கரரின் இன்னொரு சீடரான பதுமபாதர் தம்குருவின் சூத்திர பாடியத்திற்கு ஒரு வியாக்கியானம் எழுதினார். அவர் எழுதியதில் முதல் ஐந்து பாதங்களுக்குள்ள வியாக்கியானமே அழியாமல் வந்திருக்கிறது. ஆகையால் அதற்குப் பஞ்சபாதிகை என்ற பெயர் ஏற்பட்டது. இதற்குப் பிரகாசாத்மன் என்பவர் பஞ்சபாதிகா விவரணம் என்ற ஒருரை வரைந்துள்ளார். இதை அடிப்படையாகக் கொண்டு விவரணம் என்ற மரபு அத்வைதத்தில் தோன்றியது.

விவரணக் கொள்கைகளைத் திரட்டி விவரணப் பிரமேய சங்கிரகம் என்ற நூலைப் பாரதீ தீர்த்த வித்யாரணியர் இயற்றினார். இவருடையதே பஞ்சதசீ என்னும் காவியம். அத்வைதத்தில் சங்கரருக்குப் பின் வந்த மற்றொரு மரபு பாமதீ என்பது. இதற்கு மூல நூல் வாசஸ்பதி மிசிரர் சங்கரருடைய சூத்திர பாஷ்யத்திற்கு எழுதிய பாமதீ என்னும் வியாக்கியானம். அமலானந்தர் எழுதிய கல்பதரு பாமதீயின் விளக்கம். இதற்கு உரை, அப்பைய தீட்சிதரின் கல்பதரு பரிமளம் என்பது. அத்வைத மதத்திலுள்ள பேதங்களை வகுத்துச் சித்தாந்த லேச சங்கிரகம் என்னும் நூலை அப்பைய தீட்சிதர் இயற்றினார். ஏனைய அத்வைத நூல்களின் சில முக்கியமான நூல்கள், சர்வக்ஞாத்ம முனியின் சங்க்ஷேப சாரீரகம் அர்ஷரின் கண்டன கண்டகாத்யம்; சித்சுகரின் தத்வப்பிரதீபிகை; மதுசூதன சரசுவதியின் அத்வைத சித்தி; தர்மராஜரின் வேதாந்த பரிபாஷை; சதானந்தரின் வேதாந்தசாரம். சமஸ்கிருதத்தைத் தவிர மற்ற மொழிகளிலும் வேதாந்த நூல்கள் உண்டு. இந்தியில் நிச்சல தாசர் எழுதிய விசார சாகரம், விருத்திப் பிரபாகரம் என்னும் நூல்களும், தமிழில் தாண்டவராய சுவாமிகள் எழுதிய கைவல்லிய நவநீதம் என்னும் நூலும், மக்களுக்கு மிகவும் உபயோகமுள்ளவை.

அத்வைத மதத்தில் ஆறு அளவைகள் அல்லது பிரமாணங்கள் ஒப்புக் கொள்ளப்படுகின்றன. அவையாவன: பிரத்தியட்சம், அனுமானம், உபமானம், அர்த்தாபத்தி, அனுபலப்தி, சப்தம் என்பன. (1) பிரத்தியட்சப் பிரமாணம் என்பது சாதாரணமாக இந்திரியங்களுக்கும், விஷயங்களுக்கும் உள்ள சேர்க்கை. இதனால் ஏற்படும் ஞானம் பிரத்தியட்சஞானம். உதா

ரணமாகக் கண்களுக்கும் ஒரு விஷயத்தின் உருவத்திற்கும் சம்பந்தம் உண்டாகும்போது காட்சி ஏற்படுகின்றது. வெளியேயுள்ள பொருள்களை அறிவதற்குத்தான் இந்திரியங்களின் உதவி வேண்டும். நம் மனத்திலுள்ளவற்றை உணர்வதற்கு மனமேதான் காரணம். இதற்கு மானதப் பிரத்தியட்சம் என்று பெயர்.

(2) அநுமானம் என்பது ஒரு குறியின் ஞானத்தின் வாயிலாக, அது எதைக் குறிக்கின்றதோ அதையறிவது. புகையைக் கண்டு, நெருப்பை அனுமானிக்கிறோம். குறிக்கு ஏது வென்றும், குறிக்கப்படும் பொருளுக்குச் சாத்தியம் என்றும் பெயர். இவ்விரண்டுக்கும் உள்ள சம்பந்தம் வியாப்தி. விரிவாகவுரைக்கப்படும் அனுமானத்திற்கு ஐந்து அவயவங்கள் உள்ளன. உதாரணமாக: குன்றில் நெருப்பு உள்ளது (பிரதிஞ்ஞை); அங்கே புகையிருப்பதால் (ஏது); எங்கெங்குப் புகையுளதோ அங்கங்கு நெருப்புளது. அடுக்களையிலுள்ளது போல (உதாரணம்); நெருப்பால் வியாபிக்கப்பட்ட புகை குன்றில் உளது (உபநயம்); ஆகையால் குன்றில் நெருப்புளது (நிகமனம்).

(3) உபமானம் என்பது இரண்டு பொருள்களை ஒப்பிட்டுப் பார்ப்பது. இதனால் ஏற்படும் ஞானம் உபமிதி. கவயம் என்ற விலங்கு, பசுவைப் போன்றது என்று ஒருவன் கேள்வியினால் தெரிந்து கொள்கிறான். பின்னர் வனத்திற்குச் சென்று கவயத்தைப் பார்க்கிறான். அப்பொழுது தான் காணும் விலங்கைப் போலுள்ளது பசு என்று உணர்கிறான்; இது உபமிதி ஞானம்.

(4) அர்த்தாபத்தி என்பது ஒரு விஷயம் நேரிடையாக விளங்கவில்லையானால், அதை விளக்கக்கூடிய ஒன்றைக் கற்பிப்பது. ஒருவன் பகற்பொழுதிலே சாப்பிடுவதில்லை; ஆனால் இளைக்காமல் இருக்கிறான். இவ்விரண்டையும் பொருத்துவதற்காக ''அவன் இரவில் உண்கின்றான்'' என்று ஊகிக்கின்றோம்.

(5) அனுபலப்தி என்பதுஒருபொருளின் இன்மையை உணர்வது. ''தரைமீது குடம் இல்லை'' என்று குடத்தின் இன்மையை அனுபலப்தி மூலம் அறிகின்றோம்.

(6) சப்தம் என்பது கேள்வி ஞானம். பதங்களின் சேர்க்கைகளாகிய வாக்கியங்களினின்று அறிவு ஏற்படுகின்றது. சப்தப் பிரமாணம் மற்றப் பிரமாணங்களைவிட முக்கியமானது; ஏனெனில் ஆத்மஞானம் உபநிடத வாக்கியங்களிலிருந்துதான் ஏற்பட வேண்டும். மீமாம்சகர்கள் வேதங்களின் தாற்பரியம் கர்மம் என்று வாதிக்கின்றார்கள். ஏனென்றால், அவர்களுடைய கொள்கைப்படி செயலையொட்டியே ஒரு வாக்கியத்திலுள்ள பதங்கள் பொருளைத் தெளிவுறுத்துகின்றன. வேதாந்திகளோ என்றால், செயலோடு சம்பந்தப்படாத ஒரு பொருளையும் வாக்கியத்தினின்று அறியலாம் என்கிறார்கள். மிகவும் ஒளிபெற்றவன் சந்திரன் என்றபோது, சந்திரனின் சொரூபத்தை உணர்கிறோம்; இங்குச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. உபநிடதங்கள், ஆத்ம பிரம்ம வஸ்துவை இவ்வாறே உணர்த்துகின்றன.

அறிவது என்ற விவகாரத்தில் நான்கு கூறுகள் உள்ளன. (1) அறிபவன் (2) அறியப்படும் பொருள் (3) அறியும் வழி (4) அறிவு. இந்நான்கும் ஒரே ஆத்ம வஸ்துவின் பேதங்கள் என்பது அத்வைதத்தின் கொள்கை. ஆத்ம சைதன்னியம் அந்தக்கரணத்தில் பிரதிபலித்து அறிபவன் (பிரமாதா) என்ற பெயரையடைகின்றது. அறியப்படும் பொருளிலும், அதே சைதன்னியம் உள்ளது (விஷயம்). அஞ்ஞானத்தால் இவ்விரண்டும் வேறாகக் காணப்படுகின்றன. பிரமாண வியவகாரத்தினால், இரண்டிற்கும் சம்பந்தம் ஏற்படுகின்றது. இதை ஏற்படுத்தும் கருவி விருத்தியிலும் (பிரமாணம்) சைதன்னியம் விளங்குகின்றது. விருத்தியின் வியவகாரத்தினால் ஞானம் (பிரமிதி) உதிக்கின்றது. இதுவும் ஆத்ம சைதன்னியமே. இவ்வாறு பிரமாண வியவகாரத்தை ஆராய்ந்தாலும்கூட ''ஆத்மாவொன்றே உளது; அதன்சொரூபம் ஞானம்'' என்பது விளங்கும்.

இனி, உண்மை எது, பொய் எது என்று விசாரிப்போம். உண்மை என்பது ஞானத்தின் தன்மை. ஒரு ஞானம் பொய்யாவது, ஞானத்தின் வெளியேயுள்ள சில சந்தர்ப்பங்களினால் ஆகும். இதை சம்ஸ்கிருதத்தில் ''ப்ராமாண்யம் ஸ்வத:அப்ராமாண்யம் பரத'' என்பார்கள். பொய்ஞ்ஞானம் என்பதே அஞ்ஞானம். முத்துச் சிப்பியை வெள்ளியென்று மதிப்பது அஞ்ஞானத்தால். அஞ்ஞானத்தின் விஷயத்தில் சொரூபத்தைப் பற்றிய விவாதம் இந்திய தரிசனங்களிடையே யுண்டு. (1) பௌத்த மதத்தின் ஒரு சாரரான சூனியவாதிகள், இல்லாதது தோன்றுகின்றது என்று கூறுகிறார்கள் (அஸத்க்யாதி). (2) பௌத்த மதத்தின் மற்றொரு சாரரான விஞ்ஞான வாதிகள், உள்ளே விஞ்ஞான ரூபமாயுள்ள பொருள் தவறாக வெளியே தோன்றுகின்றது என்கிறார்கள் (ஆத்மக்யாதி). (3) மீமாம்சை மதத்தின் ஒரு சாரரான பிரபாகரர்களும், சாங்கியர்களும் இவ்வாறு உரைக்கின்றனர். ''இது வெள்ளி'' என்று சொல்லும்போது, இது என்ற ஞானமும், வெள்ளியென்ற ஞானமும் தனித்தனியே உண்மைதான். இது என்பதை நேரிடையே பார்க்கிறோம். முன்பார்த்த வெள்ளியை நினைவு கூர்கின்றோம்(ஸ்மரிக்கிறோம்). தவறாக இவ்விரண்டையும் சேர்த்து ''இது வெள்ளி'' என்று நினைக்கிறோம். இதுவே அஞ்ஞானம் (அக்யாதி). (4) மீமாம்சை மதத்தின் மற்றொரு சாரரான பாட்டர்களும் நையாயி

கர்களும் பொய்யென்பது ஒன்றை மற்றொன்றாக மதிப்பது என்று கருதுகிறார்கள். கடையிலுள்ள வெள்ளியை இங்கே காண்கிறோம். இதற்குக் காரணம் முத்துச் சிப்பிக்கும், வெள்ளிக்கும் உள்ள ஒப்பு சாதிருசியம் (அன்யதாக்யாதி). (5) அத்வைதிகள் இவ்வாறு பகர்கின்றனர்:—பொய்யாகத் தோன்றும் வெள்ளி உள்ளதும் அன்று, இல்லாதததும் அன்று. அது தோன்றுவதால் 'அது இல்லை' என்று சொல்லிவிடலாகாது. முத்துச்சிப்பியின் உண்மை ஞானம் உதயமாகும்போது, வெள்ளி மறைந்துவிடுவதால் அதை உள்ளது என்றும் கூற முடியாது. ஆகையால் அது அநிர்வசனீயம் (விவரிக்க முடியாதது); அவித்தையினால் உற்பத்தி செய்யப்பட்டது; ஞானத்தினால் அழிவையடைவது (அநிர்வசனீயக்யாதி).க்யாதி என்பது பொய்யைப் பற்றிய வாதம்.

உண்மையின் இலக்கணம் ''என்றும் உள்ளது; காலம் முதலிய அளவிற்கு உட்படாதது'' என்பதாம். இவ்விலக்கணத்தின்படி பார்த்தால், பிரமம் அல்லது ஆத்மாவொன்றே உண்மை. இதற்குக் குணங்கள் இல்லை. குறிகள் இல்லை. இது சொல்லுக்கும் மனத்துக்கும் எட்டாதது. ஆகையால்தான் உபநிடதங்கள் இது அன்று (நேதிநேதி) என்று, விலக்கல் வாயிலாகப் பிரமத்தின் சொரூபத்தைப் போதிக்கின்றன. இதுவே நிர்க்குணப் பிரமம். நம்முடைய புத்திக்குச் சகுணமாக (குணங்களோடு கூடியதாக)த் தோன்றுகிறது. இந்த நிலையில் பிரமம் உலகத்திற்குக் காரணம். சகுணப் பிரமம் அல்லது ஈசுவரன் உலகிற்கு நிமித்த காரணம் மாத்திரம் அல்ல; உபாதான காரணமும் அப்பொருளே. பிரமத்தினிடம் இருந்து உலகம் பிறக்கின்றது; பிறந்தபின் அதனுள்ளே அடங்குகின்றது. ஆனால் உலகம் பிறப்பதும், நிலைப்பதும், அடங்குவதும் உண்மை அல்ல. பால் தயிராக எவ்வாறு மாறுகிறதோ, அவ்வாறு பிரமம் உலகாகப் பரிணமிப்பது கிடையாது. கயிற்றினிடத்தே பாம்பு தோன்றுவது போல, பிரமத்தை ஆதாரமாகக் கொண்டு உலகம் தோன்றுகிறது. இந்தக் கொள்கைக்கு விவர்த்தவாதம் என்று பெயர். அதாவது பிரபஞ்சம் மாயை அல்லது மித்யை (பொய்த் தோற்றம்) என்பதாம்.

உலகம் மாயையென்று சொல்வதால் அத்வைதத்திற்கும் சூனியவாதத்திற்கும் வேறுபாடில்லை என்று சிலர் கருதுகின்றனர். அது தவறு. சூனிய வாதம் ''உண்மை என்பது ஒன்றுமில்லை'' என்று கூறுகின்றது. அத்வைதம் ''பிரமம் ஒன்றே உண்மை'' என்று போதிக்கின்றது. ''பாம்பும் உண்மையன்று, கயிறும் உண்மையன்று. இல்லாதது வியவகாரத்தில் கயிறாகவும், பிரமத்தில் பாம்பாகவும்தோன்றுகிறது''—இது சூனியவாதம். ''உண்மை பிரமம் ஒன்றே. இது வியவகாரத்தில் கயிறு முதலியனவாகவும் தோன்றுகிறது''—இது அத்வைதம். இத்தோற்றத்திற்குக் காரணம் மாயை. மாயை ஒரு பாவ பதார்த்தம். அதாவது அது ஞானத்தின் அபாவம் அன்று; அது மித்யா ஞானம். மேலும், அது அனாதி, அதாவது ஆதியற்றது. காலம் மாயையின் காரியமான படியால், மாயை எப்பொழுது தோன்றிற்று என்னும் கேள்விக்கு இடமில்லை. ஆகையால் மாயை அனாதி. ஆனால் அது நித்தியமன்று. நித்தியமான பொருள் பிரமம் ஒன்றே! மாயை எவ்வியல்புடையது என்று வினவுங்கால், நாம் ஒரு முடிவுக்கும் வர முடியாது. அது சத்தும் அன்று அசத்தும் அன்று. ஆகையால், அது அநிர்வசனீயம் என்று கூறப்படுகிறது. அது எத்தகையது என்று சொல்ல இயலாது. ஆனால் ஞானம் உதயமாகும்போது எவ்வாறு சூரியன் முன் இருள் நிலைக்காதோ, அவ்வாறு மாயை நில்லாது மறைந்து விடுகிறது.

அவித்யை அல்லது அஞ்ஞானத்தினால், சீவன் தான்வேறு பிரமம் வேறு என்று கருதுகிறான்; தானல்லாதவற்றைத் தானாகப் பாவிக்கிறான்; இதற்கு அத்தியாசம் என்று பெயர். ஆத்ம தருமங்களை அனாத்மாவிலும், அனாத்ம தருமங்களை ஆத்மாவிலும் ஏற்றி, ஒன்றை மற்றொன்றாகப் பாவிப்பது அத்தியாசம். இதனால்தான் ''நான் இது'' ''என்னுடையது இது'' என்று வியவகாரம் ஏற்படுகிறது. மகன், மனைவி முலியவர்கள் இன்புற்றோ துன்புற்றோ இருந்தால் ஒருவன் ''நான் இன்புற்றுள்ளேன். நான் துன்புற்றுள்ளேன்'' என்று கருதுகிறான். அதுபோலவே, தேகம் இந்திரியங்கள் மனம் முதலியவற்றின் தருமங்களை ஆத்மாவின்மீது ஆரோபிக்கிறோம். ''நான் பருத்திருக்கிறேன் இளைத்திருக்கிறேன். நான் குருடு, செவிடு; நான் எண்ணுகிறேன், விரும்புகிறேன்'' என்று தவறாக நாம் மதிக்கிறோம். உண்மை இதுவன்று. ஜீவாத்மாவின் வாஸ்தவ சொரூபம் பிரமம். இந்த உண்மையைத் தத்துவம்அசி முதலிய மகாவாக்கியங்கள் போதிக்கின்றன.

இம்மகாவாக்கியங்கள் சீவனுக்கும் பிரமத்துக்கும் உள்ள அபேதத்தைப் போதிக்கின்றன. தத் த்வம் அசி என்ற வாக்கியத்திற்கு, ''அது நீ. நீஅதுவாய் இருக்கின்றாய்'' என்பது பொருள். இது வாச்சியப் பொருள் அன்று, லட்சியப் பொருள். வாச்சியம் என்பது ஒரு சொல்லுக்குள்ள நேரான பொருள். லட்சியம் என்பது குறிப்புப் பொருள். சிங்கம் என்னும் சொல்லின் வாச்சியம் வனத்திலுள்ள ஒரு விலங்கு; ஒரு மனிதனைக் குறிப்பிட்டு 'அவன் சிங்கம்' என்று சொன்னால், இங்கே சிங்கத்தின் சில குணங்களைப் பொருளாகக் கொள்ளவேண்டும். இது இலட்சியப் பொருள். தத் த்வம் என்ற பதங்களுக்கும் இலக்கணையால்பொருள் கொள்ள வேண்டும். தத் என்ற சொல்லுக்கு வாச்சியம். சர்வ சக்தி முதலிய குணங்கள் வாய்ந்த ஈசுவரன்; த்வம் என்ற சொல்லுக்கு

வாச்சியம், அற்ப சக்தி முதலிய குணங்கள் படைத்த ஜீவன். இவ்விரண்டிற்கும் அபேதம் இருக்க முடியாது. ஆகையால் தத் த்வம் என்ற இரண்டு பதங்களுக்கு லட்சியமான பிரமத்தைப் பொருளாகக் கொள்ள வேண்டும். இது மகாவாக்கியத்தின் அகண்டார்த்தம் என்று சொல்லப்படுகிறது. இந்த உண்மையை சாட்சாத்கரிப்பது மோட்சம்.

மோட்சத்தைப் பெறுவதற்கு வழி, ஞானம் கருமம் சாதனமாகாது. கருமத்தினால் இல்லாத ஒரு பொருளை உற்பத்தி செய்யலாம் (உற்பத்தி); ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தையடையலாம் (பிராப்தி); ஒன்றை மற்றொன்றாக மாற்றலாம் (விகாரம்); மலினமாயுள்ள வொன்றைத் துடைத்துச் சுத்தமாக்கலாம் (சம்ஸ்காரம்); ஆத்மா எப்பொழுதும் உள்ளது. எங்கும் உள்ளது; நிர்விகாரமாய் நித்திய சுத்தமாய் விளங்குவது. ஆகையால் அது கருமத்திற்கு விஷயமாகாது. அதை அடைவது என்று சொல்வது கூட ஔபசாரிகம். எவ்வாறு சில சமயங்களில் ஒருவன் தான் அணிந்த மாலை தன் கழுத்திலிருக்க, அதை மறந்து அங்குமிங்கும் தேடி அலைகிறானோ, அதுபோல, நாம் ஆத்மாவைத் தேடுகிறோம். எவ்வாறு கழுத்திலுள்ள மாலையை அடைய வழி, அதைத் தெரிந்து கொள்வதோ, அவ்வாறே ஆத்மாவையடைய மார்க்கம் ஞானம். நிஷ்காமகருமத்தினால் மனம் சுத்தமடைகிறது. உபாசனையால் ஒருமுகப்படுகிறது. அப்பொழுது ஒருவன் ஞானமார்க்கத்திற்கு அதிகாரியாகிறான்; வேதாந்த விசாரத்தில் ஈடுபடுகிறான்.

வேதாந்த விசாரத்தை ஆரம்பிப்பதற்கு முன், நான்கு சாதனங்களை ஒருவர் பெற வேண்டும் என்று சங்கரர் கூறுகின்றார். (1) நித்தியாநித்திய வஸ்து விவேகம்; அழியாதது ஆத்மா. அழியக்கூடியவை மற்றப்பொருள் என்ற பகுத்தறிவு. (2) இகாமுத்ரார்த்தபர போக விராகம்; இந்த லோகத்திலும் பரலோகத்திலும் நாம் அடையக்கூடிய சுகத்தை நாடாதிருத்தல். (3) சமாதிசட்கசம்பத்து; சமம் முதலிய ஆறு குணங்கள். சமம் மனத்தை அடக்குதல்; தமம் இந்திரியங்களைத் தத்தம் விஷயங்களிலிருந்து திருப்புவது; உபரதி— திருப்பிய இந்திரியங்களை மறுபடியும் வெளிப்போகாது காத்தல்; திதிட்சை-வெப்பம், குளிர் முதலிய இரட்டை அனுபவங்களைப் பொறுத்தல்; சமாதானம் - மனத்தை ஒரு நிலையில் வைப்பது. சிரத்தை-வேதாந்த போதனையில் ஆர்வம் கொள்ளுவது. (4) முமுட்சுத்துவம் ; மோட்சத்தைப் பெற வேண்டும் என்ற இச்சை. இந்த நான்கு சாதனங்களையும் பெற்ற ஒருவன் வேதாந்த விசாரம் செய்ய வேண்டும.

சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்பவை ஞானமார்க்கத்தின் பகுதிகள். சிரவணம் என்பது வேதாந்த வாக்கியங்களில் அர்த்தத்தைக் குருவினிடமிருந்து கேட்பது. மனம் என்பது கேட்ட பொருளைச் சிந்திப்பது. நிதித்தியாசனம என்பது சிந்தித்துத தெளிந்ததை இடைவிடாது தியானிப்பது. ஆத்ம சாட்சாத்காரம பெற நேரிடையான சாதனம் சிரவணமா? தியா ௭ மா? என்ற விவாதமொன்று அத்வைதிகளிடையே உளது. வவரணப் பிரஸ்தானத்தைச் சேர்ந்தவாகள் சிரவணம் என்றும் பாமதிப் பிரஸ்தானத்தைப் பின்பற்றுபவர்கள் தியானம் அல்லது பிரசங்கியானம் என்றும் கூறுகின்றார்கள். ஆனால் இவ்விரு வகுப்பினரும் ''சிரவணத்திலாலோ அல்லது பிரசங்கியானத்தாலோ ஞானம் உதயமாகின்றது, இதுவே மோட்சத்திற்குச் சாதனம்'' என்று ஒப்புக் கொள்கின்றனர்.

இந்தப் பிறப்பிலேயே நாம் மோட்சத்தைப் பெறலாம். அவ்வாறு மோட்சம் அடைந்தவர்கள் சீவன் முக்தர்கள். மோட்சம் என்பது நம்முடைய சொரூபமானபடியால், அதை வேறு தேசத்திலோ, வேறு காலத்திலோ அடைய வேண்டும் என்பதில்லை. மோட்சத்தை மறைத்து நிற்பது அஞ்ஞானமானபடியால், அஞ்ஞானத்தின் அழிவே மோட்சம். சீவன் முக்தர்கள் தேகம் தாங்கிச் சீவிப்பவர்கள் போல நம்முடைய அனுபவத்திற்குக் காணப்படுகின்றார்கள். உண்மையில் அவர்களுக்குத் தேகமேயில்லை; அவர்கள் அவ்வாறு காணப்படுவது நம்மையும் முக்தர்களாக ஆக்குவதற்காக. அத்வைத அனுபவத்ஊதச் சங்கரர் ''ஞானமே உருவாயும், ஆகாயத்தைப்போல மேலானதாயும், எப்பொழுதும் ஒரே பிரகாசமாயும், பிறப்பற்றும், ஒன்றாகவும், அழிவற்றும் மலமற்றும், எங்கும் வியாபகமாயும் இரண்டற்றதாயும் எது உளதோ அதுவே நான் எப்பொழுதும் முக்தன் நான்'' என்று தம்முடைய உபதேச சாகஸ்ரீயில் விளங்கியிருப்பது, இங்கு நாம் உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

# சிவஞான சித்தியார்

"சித்தாந்த கலாநிதி"
ந. ரா. முருகவேள், M.A.M.O.L.

## முன்னுரை

அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ் மொழியிலுள்ள தத்துவ நூல்களுள், சிவஞான சித்தியார் மிகவும் தலைசிறந்த ஒன்றாய்த் திகழ்கின்றது. 'சிவத்துக்குமேல் இல்லை தெய்வம், சிவஞான சித்திக்கு மேல் இல்லை நூல்' என்பது பழமொழி. ''பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும்'' எனக்குருஞானசம்பந்தர் இந் நூலைப் புகழ்ந்து போற்றியுள்ளார்.

''பாதிவிருத் தத்தால்இப்பார்விருத்த மாகஉண்மை
சாதித்தார்பொன்னடியைச்சாரும்நாள் எந்நாளோ

என வேதாந்த சித்தாந்த சமரச ஞான வித்தகச் சான்றோராகிய தாயுமான சுவாமிகள் அருளிச் செய்திருப்பதும், சிவஞான சித்தியாரின் சிறப்பைச் செவ்விதினில் உணர்த்தும்.

செருமானிய நாட்டின் புகழ்பெற்ற மாபெரும் கவிஞராகிய, கெத்தே என்பவர், காளிதாசர் இயற்றிய சாகுந்தலம் என்னும் வடமொழி நாடகத்தின் சிறப்பினைக் குறித்து, ''இளவேனிலின் எழில்மிக்க பல மலர்களையும், முதுவேனிலின் இனிய நல்ல கனிவகைகளையும், மற்றும் ஆன்மீக உணர்வைக் கவர்ந்து களிப்பித்து அரும் பெரும் விருந்தளிக்கவல்ல பொருள்கள் அனைத்தையும், இம்மண்ணுலகையும் அவ் விண்ணுலகையும் எல்லாம் நின்னால் ஒரே ஒரு பெயரிலேயே ஒன்றுசேர்த்து அடக்கி இணைத்துக் கூற இயலுமா? இவைகள் அனைத்தையும் ஒருங்கே இணைத்துக் கூறும் வகையில், சகுந்தலை என்று நான் நினக்குப்பெயரிடுகின்றேன்'' என்றுபுகழ்ந்து பாடியிருக்கின்றார். சிறந்த நல்ல இலக்கியங்களாகத் திகழ்வன எல்லாவற்றிற்குமே, இப்பாராட்டுரை பொருந்துவதொன்றாக விளங்குதலின், நாம் நம் சிவஞானசித்தியாருக்கும் கூட, இதனை ஏற்றபெற்றி மாற்றியுரைத்துக் கொண்டு, போற்றி மகிழலாம்.

''இன்பொளிர் வேனிற் காலத்
தெழில்மலர் கனிகள் மற்றும்
மன்பெருங் கவர்ச்சி மிக்க
மகிழ்ச்சிநல் விருந்தூண் மண்விண்
என்பவை எலாம்சேர்ந்த ஒன்றைச்
'சித்தியார்' எனும்ஓர் பேரால்
நன்றுற நவில்வேன்! யாவும்
நனிஅதில் அடங்கும் நன்றே!''*

சிவஞானசித்தியார், சொற்சுருங்கிப் பொருள்நலம் பெருகித், தெளிவுமிகுத் திகழும் வகையில், அறிவு நூல்களின் முடிவெலாம் அகத்தடக்கி ஆசிரியர் மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் என்னும் நூலைத் தழுவி, அதன் வழிநூலாகச் சிறந்ததுறையில், ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரியாரால் இயற்றப் பெற்றதாகும். தமிழ்மொழிக்கண் உள்ள தத்துவ நூல்களுள் எல்லாம், மிகவும் தலைசிறந்து திகழ்வது, சிவஞான சித்தியாரேயாகும் என நாம் துணிந்து கூறலாம்.

''பார்விரித்த நூல்எல்லாம்
பார்த்தறியச் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோதும்''

என்று தருமையாதீன குரு முதல்வர் ஆகிய குருஞானசம்பந்த சுவாமிகள், இந்நூலைப் பெரிதும் புகழ்ந்து போற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

---

* "Would'st thou young year's blossoms
and the fruits of its decline,
And all by which the soul is charmed,
enraptured, feasted, fed,
Would'st thou the Earth and Heaven itself
in one sole name combine?
I name thee, O Sakunthala! and all
at once, is said."

—J.W. Geethe

## சிவாகமங்களுக்கு உரையாணி

''தண்டமிழின் மேலாந் தரம்'' என்று கூறத்தக்க நூல்களுள் ஒன்றாக ஒளிவிட்டுத் திகழும் சிவஞானசித்தியார், தமிழ் மக்களின் சமய தத்துவ மெய்ப்பொருள்களை விளக்குகின்றது. தந்நிகரற்ற நூலாகத் தனிமேம்பாடுற்று விளங்குகின்றது. இதனைச் ''சிவாகமப் பொருள்களுக்கெல்லாம் ஓர் உரையாணி'' என்று ஆசிரியர் மாதவச் சிவஞானசுவாமிகள் பெரிதும் வியந்து புகழ்ந்து போற்றி மகிழ்ந்து இன்புறுகின்றார். இலக்கண இலக்கிய எழில்வளங்களும், தருக்க நெறிகளின் திட்பநுட்பங்களும், திருமுறை நூல்களின் செம்பொருட் கருத்து நலங்களும், யோகஞான அநுபவ உண்மைச் செய்தித் திறன்களும், பிறவுமெல்லாம் செறிந்தொளிர்ந்து, சிவஞானசித்தியார் அறிவின்ப விருந்தாய்ச் சுவைததும்பித் திகழாநிற்கின்றது. சிறந்துயர்ந்த இனிய அரிய செய்யுள் நடையில் இத்துணைப் பலதிற எழில்நலங்களெல்லாம் ஒருங்கியைந்து, இன்தமைய இயற்றப்பட்டுள்ள பிறிதொரு நூலை, வேறு பிறிதெங்கணும் காண்டல் இயலாது. தமிழ்மொழிப் புலமைத் துறையில், ''நூலாருள் நூல்வல்லார்'' எனப் பிறங்க விரும்பும் எவரும் இதனை இன்றியமையாது கற்றுணரற்பாலராவர்.

## அளவையியல்

சிவஞானசித்தியார் என்னும் சிறந்த இந்தச் செந்தமிழ்த் தத்துவநூலை இயற்றியருளிய அருள்நந்திசிவாசாரியார், ''சகலாகம பண்டிதர்'' என விளங்கியிருந்தார். ஆயினும், தமது நூலில் வெறும் ஆகமப் பிரமாணங்களுக்கே முதன்மை கொடுத்து, அவற்றினின்று மேற்கோள்களை எடுத்துத் திரட்டிக்காட்டிச்சென்று விடாமல், பொதுஅறிவு நெறிக்கு இயைந்து நிற்கும் வழிவகைகளிலேயே, இந்நூலை எழிலுற இனிது இயற்றியிருக்கிறார். ஆகமப்பிரமாணத்திலும் யாவருக்கும் பொதுவாக உரிய அநுமானப்பிரமாணத்திற்கே, சிவஞானசித்தியாரின் முதன்மை கொடுக்கப்பெற்றுள்ளது. இவ்வுண்மை,

> ''ஈண்டுக் கூறுவன எல்லாம் பொருந்துமாறு
> பற்றியன்றி ஆகம அளவை பற்றியன அல்ல''

எனவரும் சிவஞானசுவாமிகள் உரை (சுபக்கம். 28) யினால் உணரலாம். இங்ஙனம் எத்துணை எளியரும், தாமே கருத்துக்களைச் சிந்தனை செய்து, அவற்றின் வன்மை மென்மைகளை உணர்ந்து கொண்டு நலம்பெறும் முறையில், அதற்கு ஓர் உறுதுணைவியாக, 'அளவையியல்' (பிரமாணஇயல்: Epistemology) என்னும் பகுதியினை, தமது நுண்மாண் நுழைபுலம் தோன்றச் சிவஞானசித்தியார் சுபக்கத் தொடக்கத்தின்கண் அழகுற அமைத்து, ஏற்றபெற்றி சுருங்க உரைத்து விளங்க வைத்துள்ளார், அருள்நந்தி சிவாசாரியசுவாமிகள்.

சிவஞானசித்தியாரில், 'அளவையியல்' என்னும் பகுதி மிகவும் முதன்மை வாய்ந்ததாகும். தருக்கநூலின் விரிந்து பரந்து பொருள்கள் பலவும், இதன்கண் சுருங்கத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. சுருங்கிய முறையில் அமைந்ததாயினும், இப்பகுதியானது எத்துணைத் திட்பமும் நுட்பமும் ஒட்பமும் வாய்ந்தது என்பது, அறிஞர் ஆழ்ந்து ஆராய்ந்து வியந்து போற்றுதற்குரியதாகும். அநுமான அளவையின்கண் நிகழக்கூடிய குற்றங்களையெல்லாம் தொகுத்துக் கூறி இத்துணைத்தென்று எண்ணி அறுதியிட்டு உறுதியாகக் கூறியிருப்பது, இந்நூலின் தனிப்பெருஞ் சிறப்பாகும் எனலாம். ''பக்கப்போலிகள் நான்கு; துணியப்படாதது (அசித்தம்), மறுதலைக்கட்படுவது (விருத்தம்), ஒருதலைப்படாதது (அநைகாந்திகம்) என மூன்று வகைப்படும். ஏதுப்போலிகள் இருபத்தொன்று (21) உவமைப்போலிகள் பதினெட்டு (18); மயங்கப் பேசுதல் (அப்பிரதிபத்தி), வாளாதிருத்தல் (விப்பிரதிபத்தி), என இருவகைப்படும் தோல்வி நிலைகள் இருபத்திரண்டு (22). ஆக இந்த அறுபத்தைந்தும் (65) அநுமான அளவையின்கண் நிகழக்கூடிய குற்றங்களாகும்'' என்று எண்ணி வரையறுத்து முடிவு செய்து கூறியிருத்தல், இந்நூலின் தனிமாட்சிமை எனலாம்.

> ''ஈண்டு பக்கப் போலி நான்(கு);
> ஏதுப் போலி ஒருமூன்றாய்,
> வேண்டும் எழுமூன்றுஆகும்; விளங்கு
> உவமைப் போலி ஈரொன்பான்
> காண்டும்; தோல்வித் தானம்இரண்டு,
> இருபத் திரண்டாம்; கருதில்இவை
> யாண்டும் ஒழிவர்: அவையெல்லாம்
> அளக்கில் அறுபத் தைந்துஆகும்''

சிவஞானசித்தியார், பகுத்தறிவு நெறிக்குச் சிறிதும் மாறுபடாமல், தருக்கநெறி முறைகளின் அடிப்படையிலேயே, அனைவரும் உடன்பட்டு உவந்து ஏற்றுக் கொள்ளுமாறு சைவசித்தாந்தத் தத்துவ உண்மைகளை விளக்கிச் செல்லும் வித்தகத் திறம் வாய்ந்தது.

> ''ஒருவனோ டொருத்தி ஒன்றென்
> றுரைத்திடும் உலக மெல்லாம்
> வருமுறை வந்து நின்று
> போவதும் ஆத லாலே
> தருபவன் ஒருவன் வேண்டும்!
> தான் முதல் ஈறு மாகி
> மருவிடும்! அநாதி முத்த
> சித்துரு மன்னி நின்றே!''

என வரும் சிவஞான சித்தியார் முதற்சூத்திரச் செய்யுளுக்கு மறைஞான சம்பந்த தேசிகர் வகுத்துள்ள உரை, ஆசிரியர் அருள் நந்தி சிவத்தின் தருக்கநெறி பிறழாத் தன்மையினை விளக்கும் சான்றாக, ஈண்டைக்கு இயைபுபற்றி எண்ணியுணர்ந்து இன்புறற்பாலது.

இப் பிரபஞ்சத்துக்குக் கருத்தா உண்டு என்பது பிரதிக்ஞை. அதற்கு ஏது யாது? என்னில், ஒருவனோடு ஒருத்தியென்று அவயவப்பட்டிருத்தலால் என்பது ஏது. அஃது என்போல்? என்னின், கடாதி காரியத்துக்குக் குலாலனைப் போல் என்கை திருட்டாந்தம். இக் கடாதி காரியத்துக்கும் குலாலன் உளன் என மதித்தாற்போல, ஒருவனோடு ஒருத்தி என்னும் காரியத்திற்கு ஒரு கர்த்தா உண்டு என மதிக்கை உபநயம். முன்சொன்ன திருட்டாந்தத்துக்கு இந்தத் திருட்டாந்தம் ஒத்திருக்கையால் ஏதுவாகிய காரியத்துக்கு ஒரு கர்த்தா உளன் என்ற பிரதிக்ஞையைத் திடம் பண்ணுகை நிகமனம்.''

## மங்கல வாழ்த்து

தமிழிலக்கியங்களுள் முதன்முதலாகச் சிவஞானபோதத்தினகண்' மங்கல வாழ்த்து' முறையினை ஆசிரியர் மெய்கண்டார் அமைத்துக் காட்டினார். அழகிய அரிய அம்முறையினைப் பின்பற்றிக் கடைப்பிடித்து,

''அறுவகைச் சமய த்(து) ஓர்க்கும்
அவ்வவர் பொருளாய், வேறாங்
குறியது வுடைத்தாய், வேதா
கமங்களின் குறியி றந்தங்(கு)
அறிவினல் அருளால் மன்னா,
அம்மையோ டப்ப னாகிச்
செறிவொழி யாது நின்ற
சிவனடி சென்னி வைப்பாம்''

என்று சிவஞானசித்தியார் அருளிச் செய்திருக்கும் திறம், பெரிதும் சுவை துளும்பிச் சிறந்தோளிர்கின்றது.

''இந்நூல், 'அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய்' எனவே மேற்கூறிப் போந்த பரபக்கத்துப் பொருளும், 'வேறாங் குறியது உடைத்தாய்' எனவே முதற்சூத்திரம் முதலிய ஐந்து சூத்திரத்திற் கூறப்படும் தடத்தப்பொருளும், 'வேதாகமங்களின் குறியிறந்து' எனவே இரண்டும் அன்றி ஏனைச் சொரூபலக்கணம் கூறும் ஆறாம் சூத்திரப் பொருளும், 'அருளால் மன்னி' எனவே ஞான தரிசனம் கூறும் எட்டாம் சூத்திரப்பொருளும், 'அம்மையோடப்பனாகி' எனவே ஞானமும் ஞேயமும் ஞாதிருவுமாகக் காணப்படும் ஒன்பதாம் சூத்திரப் பொருளும், 'செறிவொழியாது நின்ற' எனவே ஏகனாகி நிற்றல் கூறும் பத்தாம் சூத்திரப் பொருளும், 'சிவனடி சென்னிவைப்பாம்' எனவே அரன் மலரடிக்கீழ் இருத்தல் கூறும் பதினோராம் சூத்திரப் பொருளும், 'சென்னி வைப்பாம்' என்னும் சொல்லியல்பான் அணைந்தோர் தன்மை கூறும் பன்னிரண்டாம் சூத்திரப்பொருளும் குறிப்பான் அறியக்கிடந்தன. இங்ஙனம் தொகுத்துக் காட்டுதல் மங்கல வாழ்த்துக்கு இலக்கணமென உணர்க...''

எனவும் பிறவாறும், சிவஞானசுவாமிகள் நுண்ணிதில் உணர்ந்து வரைந்திருக்கும் உரைத்திறம், பொன்னினும் மணியினும் பெரிதும் பொதிந்து கொண்டு, போற்றற்பாலது.

## சொற்பொருட்செறிவு

சிவஞான சித்தியார் நூலின்கண் அமைந்துள்ள ஒவ்வொரு சொல்லும், 'செவ்விய மதுரம் சேர்ந்த - நற்பொருளிற் - சீரிய - கூரிய தீஞ்சொற்கள் ஆகும்.' ஒரு சிறு சொற்றானும் வறிதே விரவாமல், ஆழ்ந்த பெரும்பொருள் நலங்கள் பொதுளிப் பொலிய, மாற்றார் கருத்துக்களையெல்லாம் மறுத்தொழித்து, உயரிய சைவ சித்தாந்த தத்துவக் கொள்கைகளை நிலைபேறுற நிறுவும் வகையில், சிவஞான சித்தியாரின்கண் உள்ள அழகிய இனிய செய்யுட்கள் பலவும் அமைந்து விளங்குதல் காணலாம். பின்வரும் செய்யுளில் ஒவ்வொரு சொல்லும், சொற்றொடரும், எத்துணைப் பொருள் நுணுக்கம் வாய்ந்து திகழ்கின்றது என்பது, ஓர்ந்து உணர்ந்து உளம் மகிழத்தக்கதாகும்.

''நித்தமாய் அருவாய் ஏக
நிலையதாய் அகிலத் திற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும்
வியாபியாய் விமல னுக்கோர்
சத்தியாய்ப் புவன போகம்
தனுகரணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய் மாயை
மயக்கமும் செய்யும் அன்றே''

என வரும் சிவஞானசித்தியார் செய்யுள், மாத்தியமிகர் - க்ஷணபங்கவாதர் - உலகாயதர் - வைசேடிகர் - சாங்கியர் - பார்க்காரியர் - சிவாத்துவைதர் - மாயாவாதர் - ஆகிய பலரின் கொள்கைகளையும் மறுத்து, மாயாமலத்தின் இலக்கணத்தை வகுத்துக் கூறும் நுட்பம், பெரி

தும் வியக்கத்தக்கது. அதன் உரைநுட்பம் வருமாறு:

''மாயையின் சொரூபம் கூறுவார், 'புவன போகமும் தனுகரணமும் உயிர்க்காய்' என்றும்; அதுவும் மாத்தியமிகர் மதம்பற்றிச் சூனியத்திற் செல்லாமைப் பொருட்டு 'அகிலத்திற்கோர் வித்துமாய்' என்றும்; அதுவும் கணிகவாதிகள் மதம்பற்றிச் சார்பினிற் செல்லாமைப் பொருட்டு 'நித்தமாய்' என்றும்; அதுவும் உலகாயதர் மதம் பற்றிப் பூதங்களிற் செல்லாமைப் பொருட்டு 'அருவாய்' என்றும்; அதுவும் வைசேடிகர் முதலியோர் மதம்பற்றிப் பரமாணுக்களிற் செல்லாமைப் பொருட்டு 'எங்கும் வியாபியாய்' என்றும்; அதுவும் சாங்கியர் மதம்பற்றி முக்குணங்களிற் செல்லாமைப் பொருட்டு ஏக நிலையதாய் என்றும்; அதுவும் பாற்கரியர் மதம்பற்றிப் பிரமத்திற் செல்லாமைப் பொருட்டு விமலனுக்கோர் சக்தியாய் என்றும்; அதுவும் சிவாத்துவித மதம் பற்றிச் சிற்சத்தியிற் செல்லாமைப் பொருட்டு அசித்தாய் என்றும்; அதுவும் மாயாவாதி மதம்பற்றி அநிருவசனத்திற் செல்லாமைப் பொருட்டு வைத்ததோர் மலமாய் என்றும்; இத்தன்மைத்தாகிய மாயை ஆணவ மலம்போல் மயக்கமே செய்யும் என்னும் சைவருள் ஒரு சாராரை மறுத்தற் பொருட்டு, மயக்கமும் செய்யும் என்றும் கூறினார்... 'மயக்கமும்' என்னும் உம்மை அது தன்னியல்பன்மை யுணர நின்றது''

எனச் சிவஞானசுவாமிகள் விளக்கியிருக்கும் உரைத்திறனால், ஒரு சிறு சொற்றானும் வறிவறிதே விரவாமல், திட்ப நுட்பங்கள் செறிய இச்செய்யுள் அமைந்திருத்தல் காணலாம். சிவஞான சித்தியாரில் இன்னோரனைய செய்யுட்கள் பல அமைந்து காணப்படுதல், ஆசிரியர் அருள்நந்தி சிவத்தின் அளப்பரு மாட்சிமைகளைப் புலப்படுத்துவதாகும்.

## முடிவுரை

இத்தகைய எத்தனையோ பற்பல அருமை பெருமைகள் வாய்ந்த செந்தமிழ்த் தத்துவஞான நூல சிவஞானசித்தியார்! தமிழ் மக்கள் பெற்றுள்ள அரியபெரிய தத்துவ ஞானக் கலைச்செல்வங்களுள், சிவஞானசித்தியார் ஒப்புயர்வற்றுத் தலைசிறந்து திகழ்வதாகும். இதனைத் தமிழ் மக்கள் அனைவரும் போற்றிக் கற்றுணர்ந்து பயன்கொள்ளுதல், தலையாய கடமையாகும்.



மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் மகளிர் மேல்நிலைப்பள்ளியின், கூடுதல் வகுப்பறை மற்றும் புதிய ஆய்வுக் கூடக் கட்டிடத் திறப்பு விழா.

## தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய



# திருமாலை

(மூலமும்—உரையும்)

(முற்றொடர்ச்சி)

மேம்பொருள் போக விட்டு
மெய்ம்மையை மிக உணர்ந்து,
ஆம்பரிசு அறிந்து கொண்டு
ஐம்புலன் அகத்து அடக்கிக்,
காம்பு அறத் தலைசிரைத்து, உன்
கடைத்தலை இருந்து வாழும்
சோம்பரை உகத்தி போலும்,
சூழ்புனல் அரங்கத் தானே!

(பொழிப்புரை): காவிரி சூழ்ந்த திருவரங்கம் கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! சாதாரண மக்கள் விரும்புகிற உலகியற் பொருள்களை அவற்றின்மேல் ஆசை, சிறிதும் இன்றி அடியோடு விட்டொழித்து, ஆன்மாவின் இயற்கையை உள்ளபடி உணர்ந்து, தம் ஆன்மா ஈடேறுதற்குரிய வழிவகைகளையும் தெரிந்து கொண்டு, ஐந்து புலன்களையும் வேறுபொருள்களில் செல்லவொட்டாமல், தடுத்து நிறுத்தி, அடியோடு தம் தலையிலுள்ள சுமைகளைத் தொலைத்து, உன்னுடைய திருவாயிலிலே வந்து சேர்ந்து வாழ்கின்ற, தந்நலப்பற்று அற்றவர்களை விரும்புகின்றவன் அல்லையோ நீ!

(குறிப்புரை): மேலே ஆழ்வார் "அளியன் நம் பையல் என்னார் அம்மவோ கொடியவாறே" என்று மிகவும் வருந்தியதைக் கண்டு, ஒரு நாள் இவ்வுலகத்தில் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள்களை விரும்புவதும், அதற்காக நம் அருளை எதிர்பார்ப்பதும், அதற்கும்மேலே நம் அருள் கிடைக்காமையால் காலதாமதம் பொறாமல் வருந்தி அழைப்பதும், வியப்பாக இருக்கின்றதே! இத்தகைய ஓர் உத்தம பக்தன் கிடைக்கப்பெற்றோமே என்று திருவுள்ளம் மிகவும் மகிழ்ந்து, அம் மகிழ்ச்சி வெள்ளம் தம் திருமுகத்திலே தோற்றும்படி இருந்தார். அதுகண்ட ஆழ்வார், "பெருமானே! தங்களை அடைந்து தங்கள்பால் எல்லாக் கவலைகளையும் சுமைகளையும் ஒப்படைத்து, நிற்கும் பக்தர்களைக் கண்டால், தேவரீருடைய திருவுள்ளம் இவ்வாறோ மகிழ்ச்சியில் திளைப்பது! என்று, ஆழ்வார் பெரியபெருமாள் திருமுகத்தை நோக்கி விண்ணப்பம் செய்யும் முறையில் இப்பாடல் அமைந்துள்ளது.

இதன்கண் வரும் "மேம்பொருள்" என்னும் தொடர், மூன்று வகைகளில் பொருள்படும். 1. மேலெழுந்த பொருள் - உலகியல் வாழ்க்கைத் தொடர்பு. 2. மேவிய பொருள் - பிரித்து விலக்க முடியாதபடி வந்து பற்றிக் கொண்டிருக்கும் பொருள்; அஃதாவது தேகசம்பந்தம், அவிச்சையாகிய அஞ்ஞானசம்பந்தம் முதலியன. 3. மேம்பாட்டை விளைவிக்கும் பொருள் - தன்னைப் பற்றினாரை முற்றுணர்வினராகக் கொண்டு விரும்பி ஒழுகும்படி செய்கின்ற பொருள்; அஃதாவது உலகியற் பொருள்களுடன் கொண்டுள்ள சம்பந்தம். இம் மூவகையான தொடர்புகளையும், அடியவர்கள் அடியோடு ஒழித்துவிடுதல் வேண்டும் என்பது கருத்து.

ஐம்புலன் அகத்தடக்கலாவது - "தனக்கேயாக எனைக் கொள்ளும் ஈதே" என்றபடி இறைவனுக்கு உள்ளம் மகிழும்படி செய்யும் கைங்கரியமே பரமபுருஷார்த்தம்என்றுதுணிந்து ஒழுகுதல். "காம்பு அறத் தலை சிரைத்தல்" என்பது திருவருட் பேற்றிற்கு இறைவன் துணையே ஒழிய, நாம் செய்யும் செயல்களும் முயற்சிகளும் சாதனம் அல்ல என்று தெளிந்து ஒழுகுதல். "வாழும் சோம்பர்" என்றது, வாழும் வகைதெரியாமல் கெட்டொழியும் சோம்பர்களாகிய உலக மக்களை விலக்குகின்றது. இறைவனில்லை, சாத்திரங்கள் இல்லை, இம்மை மறுமைகளில்லை என்று கூறித் தீவினைகளைச் செய்து வாழ்பவர்கள் கெடும் சோம்பர். அவ்வாறு இன்றி, கற்பன கற்றுத் தெளிந்து, இறைவனை உணர்ந்து வழிபட்டு, அவன் திருவடிகளையே புகலடைந்து நிற்பவர்கள், வாழும் சோம்பர்கள் ஆவர். (38)

அடிமையிற் குடிமை இல்லா,
அயல்சதுப் பேதி மாரில்,
குடிமையில் கடைமைப் பட்ட
குக்கரிற் பிறப்ப ரேனும்,
முடியினில் துளபம் வைத்தாய்!
மொய்கழற்கு அன்பு செய்யும்,
அடியரை உகத்தி போலும்!
அரங்கமா நகரு ளானே

(பொழிப்புரை): திருமுடியில் துளசி மாலையை அணிந்தவனே! திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளியிருப்பவனே! உனக்குத் தொண்டு செய்வதில், உயர் குடிப்பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கமில்லாதவரும், நின்பால் அன்பு இல்லாதவரும் ஆக உள்ள, நான்கு வேதங்களைக் கற்றுணர்ந்த அந்தணர்களைக் காட்டிலும், குடிப்பிறப்பினால் மிகவும் இழிந்த கீழ் மக்கள் கூட்டத்தில் பிறந்தவர்களே ஆயினும், உன்னுடைய திருவடிகளடத்து அன்புபூண்டு ஒழுகுகின்ற பக்தர்களாகிய அடியவர்களையே, நீ பெரிதும் விரும்புகின்றாய்.

(குறிப்புரை): குடிமை-குடிப்பிறப்பிற்கு ஏற்ற நல்லொழுக்கம். 'அயலாதல்' ஆவது இறைவனுக்குத்தொண்டுசெய்வதில் ஒரு துணையாகவே வேதம் ஓதுகின்றோம் என்று அறிந்து கொள்ளாமை, வேதத்தை ஓதுவதற்குப் பயன், வேதத்தின் பொருளை உள்ளபடி அறிந்து நடப்பதுதான் என்று உணராதவர்கள், நான்கு வேதங்களிலும் வல்லவர்களானாலும், ஒரு பயனும் இல்லை என்பது கருத்து. ''சதுப்பேதிமார்-சதுர்வேதிகள்; இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் கற்றுத் தேர்ந்தவர்கள். குக்கர்-மிகவும் தாழ்ந்தவர். இறைவனின் திருவடித் தாமரைகளில் பக்தியில்லாதவர்கள், உயர்குலத்திற் பிறந்திருந்தாலும், அவர்கள் தாழ்ந்தவர்களேயாவார்கள். மேன்மைக்குக் காரணம், இறைவன்பால் தொண்டுபூண்டு ஒழுகுவதே தவிர, உயர்குடிப் பிறப்பன்று; இறைவனுக்குத் தொண்டு பூண்டு ஒழுகாமல் இருப்பதே தாழ்ச்சிக்குக் காரணம்; இழிகுலப் பிறப்பு அன்று. பிறப்பினால் உயர்வு தாழ்வு என்பது அமைவது இல்லை. (39)

திருமறு மார்ப! நின்னைச்
சிந்தையுள் திகழ வைத்து,
மருவிய மனத்தர் ஆகில்,
மாநிலத்து உயிர்கள் எல்லாம்,
வெருவுறக் கொண்டு சுட்டிட்டு
ஈட்டிய வினைய ரேனும்,
அருவினைப் பயன்அது செய்யார்
அரங்கமா நகரு ளானே!

(பொழிப்புரை): பெரிய பிராட்டியாரையும், ஸ்ரீவத்சம் என்னும் மறுவையும், திருமார்பிலே கொண்டுள்ளவனே! திருவரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனே! இந்தப் பெரிய நிலவுலகத்திலுள்ள உயிர்க்கூட்டங்கள் எல்லாம் நடுங்கும்படி, கொலை முதலிய கொடிய செயல்களைச் செய்து, ஏராளமான தீவினைகளைச் சேர்த்துக்கொண்ட பாவிகளேயானாலும், உன்னைத் தங்கள் உள்ளத்தில் விளங்கும்படி வைத்துக்கொண்டு, உறுதியான பக்தியை உடையவர்களாக இருப்பார்களாயின், அவர்கள் தாங்கள் செய்த பெருந் தீவினைகளையுடைய பயனை அனுபவித்து வருந்தமாட்டார்கள்.

(குறிப்புரை): இறைவனடத்தில் உறுதியான பக்தியை உடையவர்கள், தங்கள் தீய ஒழுக்கத்தினின்று திருந்தி, நல்லவர்களாகி உய்தி பெறுவார்கள்; அதனால் அவர்கள் செய்த பாவங்களெல்லாம் அடியோடு விலகி ஒழியும் என்பது கருத்து. (40)

வானுளார் அறிய லாகா
வானவா என்பர் ஆகில்,
தேனுலாம் துளப மாலைச்
சென்னியா என்பர் ஆகில்,
ஊனமா யினகள் செய்யும்,
ஊனகா ரக ளேனும்,
போனகம் செய்த சேடம்,
தருவரேல் புனிதம் அன்றே!

(பொழிப்புரை): தாங்கள் இழிந்த பல கொடிய செயல்களைச் செய்பவர்களாயினும், மற்றவர்களைக் கொண்டு இழிந்த கொடிய செயல்களைச் செய்பவர்களாயிருப்பினும், 'வானுலகில் உள்ள பிரமன் முதலியவர்களாலும் அறியமுடியாத பெருமையை உடைய பெருமானே! என்று கூறித் தியானிப்பார்களேயானால், தேன்பெருகின்ற திருத்துழாய் மாலையைத் திருமுடியில் அணிபவனே! என்று கூறித் துதிப்பார்களானால், அத்தகைய பெருமக்கள், தாங்கள் உண்டு எஞ்சிய எச்சில் உணவைத் தருவார்களாயின் அதனைப் பெற்றவர்கள் அப்போதே தூய்மை அடைவார்கள்.

(குறிப்புரை): இறைவனின் திருவருள் தொடர்பு பெற்றவர்களுக்கு இழிந்த பிறப்பினாலும், இழிந்த செயல்களாலும் நேர்கின்ற குறை ஒன்றும் இல்லை. அதுமட்டுமல்ல அவர்கள் உலகமக்கள் எல்லாம் தூயவர்கள் ஆகச் செய்தற்கரிய பெருமை பொருந்தியவர்களும் ஆவார்கள் என்பது, இப்பாடலின் கருத்து.(41)

பழுதிலா ஒழுக லாற்றுப்
பலசதுப் பேதி மார்கள்
இழிகுலத் தவர்க ளேனும்,
எம்அடி யார்கள் ஆகில்,
தொழுமின்நீர் கொடுமின் கொள்மின்
என்று, நின் னோடும் ஒக்க,
வழிபட அருளி னாயபோல்ம்
மதில் திரு அரங்கத்தானே

(பொழிப்புரை): மதில்கள் சூழ்ந்த திருவரங்கத்திலே எழுந்தருளியுள்ள பெருமானே! பிரமன் முதல் தங்கள் வரையில் நீண்டு வருகின்ற பரம்பரையில், ஒரு குற்றமும் இல்லாதவர்களாய், நான்கு வேதங்களையும் ஓதினவர்களாய் உள்ளவர்களே! "நமக்கு அடிமைப்பட்டவர்களாய் இருந்தால், அவர்கள் தாழ்ந்த வகுப்பில் பிறந்து இருந்தார்களே ஆயினும், நீங்கள் அவர்களைத் தொழுங்கள், உங்களிடத்தில் உள்ள சிறந்த நூற் பொருகள்களை அவர்களுக்கு உணர்த்துங்கள்; அவர்களிடத்தில் சிறந்த நூற்பொருகள் இருக்குமாயின் கேட்டு அறிந்து கொள்ளுங்கள்'' என்று அறிவுறுத்தி, அவர்களை உனக்குச் சரிநிகர் சமமாக வழிபடும்படி உரைத்தருள்னாய் போலும்!

(குறிப்புரை) : சதுப்பேதிமார்கள் - சதுர்வேதிகள்; நான்கு வேதங்களையும் கற்றுணர்ந்தவர்கள். இஃது இங்கே அண்மை விளியாய்ச் 'சதுர்வேதிகளே!' என்னும் பொருளில் வந்தது. ''என்னுடைய அடியவர்கள் இழிகுலத்திற் பிறந்தவர்களாக இருந்தாலும், அவர்களை இழிவாகக் கருதாது தொழுமின்கள்! கொடுமின்கள்! கொள்மின்கள்! என்னைப் போலவே, அவர்களையும் வழிபடுங்கள்'' என்று திருவரங்கப்பெருமாள் சதுர்வேதிமார்களுக்கு அறிவுறுத்தியருளினார் என்பது, இப்பாடலின் கருத்து. இதனால், அடியார்களிடையில் சாதி குலவேறுபாடுகள்இல்லை என்பது பெறப்படும். 'தொண்டக் குலததவர்க்குப் பண்டைக் குலம் இல்லை'. (42)

அமரஓர் அங்கம் ஆறும்,
வேதம்ஓர் நான்கும் ஓதித்,
தமர்களில் தலைவர் ஆய
சாதிஅந் தணர்க ளேனும்,
நுமர்களைப் பழிப்பர் ஆகில்,
நொடிப்பதோர் அளவில் ஆங்கே,
அவர்கள் தாம் புலையர் போலும்
அரங்கமா நகரு ளானே!

(பொழிப்புரை). திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள பெருமானே! வேதத்தின் சிறப்பு மிக்க ஆறு அங்கங்களையும், நான்கு வேதங்களையும், நெஞ்சில் பதியும்படி தெளிவுறக் கற்றுணர்ந்து, அடியார்களுக்குள்ளே முதன்மை வாய்ந்த சிறந்த அந்தண சாதியர்களாக இருந்தாலும், அவர்கள் தங்களுடைய அடியார்களை அவர்களின் பிறப்பின் இழிவை நினைத்துப் பழித்துக் கூறுவார்களாயின், ஒரு நொடிநேரத்திற்குள்ளாகவே, அந்த அந்தணச்சாதிஅந்தணர்கள்தாம், அவ்விடத்திலேயே மிகவும் இழிந்த புலையர்களாக ஆவார்கள்.

(குறிப்புரை): இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கும் வேதங்கள் எனப்படும். சிட்சை வியாகரணம் சந்தசு நிருத்தம் சோதிடம் கல்பம் என்ற ஆறும் வேதத்தின் அங்கங்கள் எனப்படும். இவைகளையெல்லாம் கற்றுத் தேர்ந்த சிறந்த அந்தணர் குலத்தவராய் இருப்பினும், அவர்கள் இறைவனுக்குத் தொண்டு செய்கின்ற உண்மை அடியவர்களை, அவர்களின் குலத்தின் இழிவு கருதி நிந்தித்துப் பழித்துரைப்பார்களாயின், அவ்விடத்திலேயே அப்போதே தம்முடைய அந்தணத் தன்மை அழிந்து, புலையர்களாய் இழிவடைந்து, கொடிய பாவிகள் ஆவர் என்பது இப்பாடலின் கருத்து.

பெண்ணுலாம் சடையி னானும்,
பிரமனும் உன்னைக் காண்பான்,
எண்ணிலா ஊழி ஊழி
தவஞ்செய்தார் வெள்கி நிற்ப,
விண்ணுளார் வியப்ப வந்து,
ஆனைக்குஅன்று அருளை ஈந்த
கண்ணறாய்! உன்னை என்னோ?
களைகணாக் கருது மாறே!

(பொழிப்புரை): கங்கை நதியாகிய பெண் உலாவுகினற சடையை உடைய சிவபெருமானும், பிரமதேவனும், உன்னைக் காண்பதற்கு விரும்பி, எண்ணுதற்கு இதயலாத பற்பல ஊழி காலங்கள் தவம் புரிந்தவர்களாய், அப்போதும் உன்னைக் காணப்பெறாமையினால், வெட்கமடைந்து தலைகவிழ்நது நிற்க, முதலையின் வாயில் அகப்பட்ட கஜேந்திரன் என்னும் யானைககாக எழுந்தருள்வந்து, விண்ணுலகில் உள்ளவர்களும் வியக்கும்படியாக நீ முன்னொரு காலத்தில் அருளை வழங்கியருளினாய். ஆயினும் இப்போது எனக்கு நீ அருள் செய்யாமையினால். நீ இரக்கம் இல்லாதவனே யாவாய். உன்னை யான் புகலிடமாக நினைத்தல் இயலுமோ?

(குறிப்புரை): மேலே அருளிச் செய்து கொண்டு வந்த பாடல்களில், பாகவதவைபவம் ஆகிய அடியார்களின் பெருமையினை, நன்கு விளக்கி மெய்ப்பித்து வற்புறுத்துவதற்காகக், கஜேந்திரஆழ்வான் என்னும் யானையினுடைய வரலாற்றை நினைவுகூர்ந்து ஆழ்வார் இங்கே குறிப்பிட்டருளுகின்றார். சிவன் பிரமன் முதலியவர்கள் திருவரங்கப்பெருமானைக் காண வேண்டுமென்று நெடுங்காலம் தவம் கிடந்தும், அப்பேறு கிடைக்காமையால், அவர்கள் நாணமுற்று வெள்கி நின்றனர். கஜேந்திர ஆழ்வான், இழிந்த விலங்காக இருந்தும், இறைவனுடைய அருளுக்கு உரியதாகிவிட்டது. ஆதலால் பிறப்பினால் வரும் உயர்வு இழிவுகள் மதிக்கத்தக்கன அல்ல என்பது, இப்பாடலின் கருத்து. கண்ணறை' - இரக்கம் இல்லாதவன். அச்சொல் விளிவேற்றுமையாய்க் 'கண்ணறாய்'- என்று 'இரக்கம் இல்லாதவனே! என்னும் பொருளில் வந்தது. களைகண்-பாதுகாப்பவன், துன்பங்களை நீக்குபவன். (44)

வளஎழும் தவள மாட
மதுரைமா நகரம் தன்னுள்,
கவளமால் யானை கொன்ற
கண்ணனை, அரங்க மாலை,
துளவத்தொண்டு ஆய தொல்சீர்த்
தொண்டர் அடிப்பொடி சொல்
இளையபுன் கவிதை யேலும்,
எம்பிரார்க்கு இனிய வாறே!

(பொழிப்புரை) அழகில் மிக்கு உயர்ந் தோங்கி, வெண்ணிறம் வாய்ந்த மாடமாளிகை களை உடைய, மிகப் பெரிய வடமதுரை என் னும் நகரத்தில், கவளம் என்னும் உணவைக் கொண்டிருப்பதும், மிகப் பருத்ததுமான குவ லயாபீடம், என்னும் கம்சனுடைய யானையை அடக்கிக் கொன்ற, கண்ணனாகிய திருவரங்கப் பெருமானைக் குறித்து திருத்துளசி மாலைத் தொண்டுபுரிந்து வருகின்றவரும், பழமையும் பெருமையும் மிக்க இயல்பான அடிமைநெறி யில் ஒழுகுபவரும் ஆன, தொண்டரடிப்பொடி யாழ்வார் அருளிச் செய்த, திருமாலை என் கின்ற இந்நூலானது, மிகவும் குற்றங்குறை களை உடைய புல்லிய கவிதையாக இருந்த போதிலும், என்னுடைய பெருமான் ஆகிய பெரிய பெருமாளுக்கு., அவர் மிகவும் சுவைத்து இன்புறத்தக்க இனிய சிறந்த நல்ல நூலாக அமைந்துவிட்டது. இஃது எத்தகைய வியப்பு!

(குறிப்புரை): சிறந்த உணவுகளை உண்டு, மதம் பிடித்துக் கொழுத்திருந்த குவ லயாபீடம் என்னும் கம்சனின் யானையை ஒழித்தருளினாற்போல, தம்முடைய பலவகை யான குற்றங்களையும் பாவங்களையும் போக்கி யருளிய பெரிய பெருமாளின் உவப்பே, தமக்கு மேலான பயன் என்று குறிப்பிட்டு, தொண்ட ரடிப்பொடியாழ்வார் இந்நூலைமுடிக்கின்றார். 'கவளம்' - யானையின் உணவுக்குப் பெயர். 'இளையபுன் கவிதை' என்பதில், ஒலிநலத்தில் இளமையும், கவிநலத்தில் குற்றத்தையும் உணர்த்தினார். திருவரங்கப்பெருமானைக் குறித்துத் தாம் பாடிய பாடல்கள் குற்றங்குறை கள் நிறைந்தவையாயினும், தம்முடைய நெஞ் சத்தின் உருக்கத்தையும், உறுதிப்பாடுமிக்க பக்தியையும் உணர்ந்திருக்கும் பெரியபெரு மாள், இதனை ஆராவமுதமாகக் கொண்டருள் வார் என்று, ஆழ்வார் குறிப்பிடுகின்றார். இப் பிரபந்தம் கற்றவர்களுக்கு, பெரிய பெருமாளி னுடைய திருவுள்ளத்தின் உவப்புத்தானே, பய னாக அமையும் ஆதலின், இப்பிரபந்தம் கற் பதனால் விளையும் பயன், தனியாக வேறு கூறப்படவில்லை.

[தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய திருமாலை நூலின் மூலமும்—உரையும் முற்றிற்று.]

—ஆசிரியர்

---

## பசவேசுவரர் உபதேசங்கள்

(1) மனிதர் அனைவரும் சம நிலையினரே. (2) மனிதர்களில் எவரும் பிறப்பினாலோ தொழிலினாலோ பாற்பகுப்பினாலோ, தம்முள் சிறிதும் உயர்வு தாழ்வு உடையவர் அல்லர். (3) மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையிலோ அன்றி, ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையிலோ, வேறுபாடு எதுவும் இருத்த லாகாது. (4) ஆன்மீக வளர்ச்சி நெறியில் ஓர் ஆணுக்குப் போலவே ,ஒரு பெண் ணுக்கும் சமஉரிமைகள் உண்டு. (5) தான் விரும்பும் ஒரு தொழிலை ஒவ்வொரு வரும் செய்யலாம். வேலையின்மையும் பிச்சையேற்றலும் ஆகிய சமுதாயத் தீங்குகள் அறவே ஒழிக்கப்படல் வேண்டும். (6) பெண்களும்கூட ஒரு தொழிலை மேற்கொள்ளலாம். (7) உடலுழைப்பால் செய்யப்பெறும் தொழில் எதுவாயினும், அது பெருமைக்குரியதேயாகும்; தொழிலில் உயர்வு தாழ்வு என்பது இல்லை. (8) வருணம் ஆசிரமம் பற்றிய வேறுபாடுகள் புறக்கணிக்கத் தக்கவை. (9) உட லுழைப்பின் மூலமாகவே ஆன்மிக வளர்ச்சியைத் தேடிக் கொள்ளக் கூடும். (10) வெறும் துறவும், காடுகளிற் சென்று வசித்தலும், வாழ்க்கைத் துன்பங் களிலிருந்து தப்பியோட முயலும் கோழைத்தனமே யாகும். (11) கலப்பு மணங் களும், கலந்து உணவு உண்ணலும், பெரிதும் போற்றி வளர்க்கத் தக்கனவாகும். (12) சமுதாய வாழ்வில் தீண்டாமை என்பது கூடாது; மக்கள் அனைவரும் ஒரு குடும்பத்தினர் போலக் கலந்து பழகுதல் வேண்டும். (13) ஆன்மீகத் துறையிலும் சமுதாயத் துறையிலும் ஒவ்வொரு மனிதனும், தானே சுயமாகச் சிந்திக்க உரிமை யுடையவன் ஆவான். (14) நிரந்தரமான சிந்தனைக்கும் ஆன்மிக முன்னேற்றத் திற்கும், அறிவும் அனுபவமும் ஆகிய இரண்டும்தான் உண்மை வழி காட்டக்கூடிய ஒளி விளக்குகளாகும். (15) ஆன்மீகக் கல்விக்கும், உலகியற் கல்விக்கும், மக்கள் வழங்கும் தாய்மொழியே உரிய கருவியாகப் பயன்படுத்தப்படுதல் வேண்டும். (16) சமய ஆராய்ச்சிகளில் கலந்து கொள்ளுவதற்கும், ஆன்மிக ஞானத்தைப் பெறுவதற்கும், ஆன்ம வளர்ச்சி நெறியைப் பின்பற்றுவதற்கும், எல்லா மனிதர் களும் சமஉரிமை உடையவர்களாவர்.

—ஆசிரியர்.

# "அடித்தடித்து அக்காரம் தீற்றிய அற்புதம்"

"தத்துவப் பேரறிஞர்"
திரு டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி, அவர்கள்
எம்.ஏ., பிஎச்.டி.,

இயற்கைக்கு மாறான அருஞ்செயலையோ, அரிய நிகழ்ச்சியையோ, உலகத்தவர் பொதுவாக அற்புதமெனக் கருதுகின்றனர். ஆயின் இயற்கை என்பது யாது என்பதைப் பற்றி எவ்வாறு துணிந்து கூற முடியும்? விஞ்ஞானிகள் உற்று நோக்கியும், செய்காட்சி முறையிலும், இயற்கையில் நியதிகளைக் காண முயலுகின்றனர். தாம் கண்டவற்றை விளக்கும் வகையில், இயற்கையின் நியதி இதுவாயிருக்க வேண்டுமென்று சட்டங்களை வகுக்கின்றனர். இதுவரை காணாத உண்மையோ நிகழ்ச்சியோ புலனானால், உடனே அதற்கேற்பச் சட்டங்களை மாற்றியோ திருத்தியோ அமைக்கின்றனர். கண், காது போன்ற பொறிகளால் அறிய முடியாத நுண்மையான காட்சிகளைக் கண்டறியுமாறு, தொலை நோக்கி, ஒலிபெருக்கி, உருப்பெருக்கி முதலியவற்றைப் பயன்படுத்துகின்றனர். பறவைகளைப் போல மனிதன் வானவெளியில் பறக்க முடியாது. மீன்களைப்போல அவன் தண்ணீரடியில் செல்லமுடியாது. ஓரிடத்தில் பேசுபவனை மிகத் தொலைவான வேறொரிடத்திலிருந்து கேட்கவோ பார்க்கவோ முடியாது. ஒலியைப் போலவோ அதைவிடவோ விரைந்து செல்ல முடியாது. இவையனைத்தும் இயற்கைக்கு மாறானவை என்று கருதப்பட்ட காலம் உண்டு. இப்போது இவையனைத்தும் நிகழக் காண்கிறோம். இவற்றை அற்புதங்கள் என எவரும் கருதார். ஆகவே இயற்கை யாதொன்பதை முற்றும் உணர்ந்தால்தான், இயற்கைக்கு மாறானது உண்டாயின், அதனை அற்புதம் என்று கூறுவது பொருந்தும். நிகழக்கூடாதவை எனக் கருதப்பெற்ற பலவற்றை, விஞ்ஞானம் இன்று செய்து காட்டுகிறது.

சமயச் சான்றோர் பேசுகின்ற அற்புதம், வேறொரு வகையானது. அது மனிதனின் ஆன்மிக வரலாறு பற்றியது. மனிதனின் இயற்கை அடிப்படையில், உண்மை நிலையில், தெய்வகமானது. அவன் அதனை மறந்து இறைவனைச் சாரபாகக் கொண்டு அதன் வண்ணமாகின்றான். அதனைச் சாயல் பிடிக்கின்றான். தனக்குத்தானே தலைவன் என்று கருதிக் கொள்கிறான். உலகமும் அதில் உறையும் மக்களும், எவையும் எவரும் தன்னுடைமையென்றும், தன் நலத்திற்கெனவும் முடிவு செய்கிறான். உயிருள்ளனவும் உயிரிலனவுமான பொருள்கள் அனைத்தையும் தன் உடைமை எனவும்; தானே தன் செயல்களுக்கு முதல்வன் எனவும் கருதிச் செருக்கித் திரிகின்றான். 'யான்' 'எனது' என்னும் செருக்கு அவனுக்கு உடன்பிறப்பு - செம்பிற் களிம்புபோல. இச்செருக்கினால் பலகாலமாக மாறி மாறிப் பிறந்து வரும் அவனை, இறைவன் வலியவந்து ஆட்கொள்வதுதான், உண்மையான அற்புதம், அருஞ்செயல். தாம் இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றதை ஓர் அற்புதமாகவே சமயச் சான்றோர் காண்கின்றனர். எடுத்துக் காட்டாக, மணிக்கவாசகர் அருளிய அற்புதத்தைப் பார்ப்போம்.

மெய்ப்பொருள் யாது என்பதைக் கருதாது, அதனை அடைவதற்கு வாய்த்த இம் மண்ணுலக வாழ்க்கையில் தையலார் அழகில் மயங்கித் தலைதடுமாறுவது இயல்பாகி விடுகிறது. இத்தகைய பொய் வாழ்க்கையை விடுத்துத் தன்னைப் பற்றிக் கொள்வதற்காகத் தன் பொன்னடிகளைக் காட்டி, மெய்யனாய் இறைவன் வெளிப்பட்டது விளம்ப முடியாத ஓர் அற்புதம்.

பூசைக் கையில் கொண்டு நன்றேவரினும் ஒதே நேரினும் முட்டுப்படாத அன்போடு இறைவனைப் போற்றாது, தாம் மங்கையர் வனப்பில் மயங்கித் தலைதடு மாறித் துயரில் புகுந்துவிடாமல் இருப்பதற்காக, இறைவன் அருள்செய்து தன் பொற்கழல்களைக் காட்டி, ஞானவேந்தனாய் வெளியே தம் முன் நின்றது விளம்ப முடியாததோர் அற்புதம்.

நல்லவனைப்போல நடித்து, ஆனால் பொய்யான பலவற்றைச் செய்து, 'நான்' 'எனது' என்னும் அகப்புறப் பற்றுக்களால் கடி பட்டு வினைவயமாக அலையும் தம்மைப், பெரிய மறைதேடிய அரிய பொருளாகிய இறைவன் தம்முன் நின்று, தம்மைப் பிடித்து அடித்து இனிப்பை ஊட்டியது அறிந்து கொள்ள முடியாததோர் அற்புதம்.

பிறப்பும் இறப்பும் ஏன் ஏற்படுகின்றன என்பதை நினையாது, பொய்யே பேசி, மாதர் கண்ணழகில் கலங்கிக் கிடக்கும்தம்மை திருவடியின் சிலம்பு ஒலிக்க, திருவாகிய தன் சக்தியைப் பிரியாது தோன்றிப் பெறுவதற் குரிய துணைவனாகத் தம்மை ஆண்டு கொண் டது அறிய முடியாததோர் அற்புதம்.

செல்வம் சுற்றம், உலக இன்பங்கள், பெண்களோடு கூட்டுறவு இவற்றால் தாக்கப் பெற்றுத் திரியும் தம்மை, இவற்றினின்றும் விடுவித்து, வெய்ய வினைகள் அழிவுறுவதற் காகத் தம் மெல்லிய மலரடிகளைக் காட்டி வீட்டின்பம் தந்து, அவ்வின்பத்தால் தாம் கூத்தாடும்படித் தம் அகத்தே புகுந்து ஆண்டு கொண்டது அறிய முடியாததோர் அற்புதம்.

வளைத்துப் பிடிக்கும் பிறப்பு இறப்புக் களின் தன்மைகளை நினையாது மங்கைய ரோடு பிணைந்து, அவர்தரும் கலவியில் அழுந்திப் பித்தனாய்த் திரியும் தம்மை, எல்லை யற்ற குணங்களையுடைய - ஆனால் இன்ன குணம், இன்னகுறி உடையவன் என்று கூற வொண்ணாத இறைவன், இளமைச் செவ்வி யுடைய இறைவியோடும் கூடிவந்து ஆண்டு கொண்டருளியது அறிய முடியாததோர் அற் புதம். இறைவனை வணங்குவதற்காக, தரப் பெற்ற இப்பிறப்பில் மலர் பறித்துத் திருவஞ் செழுத்தை ஓதியவாறே அவன் திருவடிகளில் அதனை இடாமல், மாதா கண்ணழகில் மயங்கிக் கிடக்கும் தம்மைத் தன திருவடி களைக் காட்டி, தந்தையாகப் பரிந்து வந்து ஆண்டு கொண்டது அறிய முடியாததோர் அற் புதம். இருவினை காரணமாக உயிரும்உடலும் ஊசலாடுவதைப்போல, இடைவிடாது தொடர் புற்று வர அவ்விரு வினையை அறுத்து, கண் ணுக்குப் புலனாகாத பொருளை அதனைச் சுட்டும் சொல்லால் உணரக் கூடிய நுண் ணு ணர்வினர்க்கும் உணர்வதற்கரியவனான இறை வன், தமக்கு உணர்வு தந்து (இருள் மயமாகி விட்ட தம்மை) ஒளியாக்கி, இருளினின்றும் ஒளிக்குத் தம்மைக் கடத்திச் சென்று தளை களானவற்றைப் பற்றற அறுத்து, உயர்ந்த மேலான தன் கருணையால் உலக ஆசை களைத் தீர்த்து, அடியார்கள் திருவடியில் கூட்டியது அறிய முடியாததோர் அற்புதம்.

வழி தெரியாமல் அலையச் செய்கிற காட் டைப் போன்ற, இப்பிறவியில் தலையில் புண் பிடித்த நாய் போல, மாதர்கள் விரும்பிய வற்றையே செய்து அவர்களுடன் இணங்கித் திரிகின்ற தம்மை, விண்ணவர்களும்காண ஒண் ணாத தன் திருவடிகளைக் காட்டி ஆட்கொண் டது அறிய முடியாததோர் அற்புதம்.

அடர்ந்து வருகின்ற பிறப்பு இறப்பின் தன்மைகளை நினையாது, பெண்கள் அழகி லும் இழிசெயல்களிலும் கருத்தைச் செலுத்திக் கிடக்கின்ற தம்மை எல்லையில்லாத தன் மலரடிகளைக் காட்டி, அறிவு தந்து ஆண்டு கொண்டது அறிய முடியாததோர் அற்புதம்.

இவ்வாறு பத்துப் பாக்களில் மாணிக்க வாசகர் ஆன்மிகத் துறையில் நிகழ்ந்த அற் புதத்தை விவரிக்கிறார். உயிரின் இயல்பு யாது? அதற்கு உறுதி செய்வது யாது அது அடைய வேண்டுவது யாது, அதற்கு நிலையான இன்பந் தரவல்லது யாது என்பவற்றைச் சரியாக உண ராது, பொய்ந் நின்ற ஞானம், பொல்லா ஒழுக்கு, அழுக்கு உடம்பு ஆகியவற்றோடு வாழ்வதே உயிரின் போக்காக உள்ளபோது, இறைவன் தானே வலிய வந்து ஆட்கொள் கிறான். அனைத்தாகும் நற்பண்புகளுக்கும் உறைவிடமாக உள்ள அவன், இன்ன பண்பால் உணரக் கூடியவன், இன்ன குறியால் தெரிந்து கொள்ளக்கூடியவன் என்னும் வரையறைக்கு அப்பாற்பட்டவனாயினும், உயிர்கள் மீது வைத்துள்ள பேரருள் காரணமாக இறைவி யோடும் காட்சி கொடுத்து உயிர்களை உய் விக்கின்றான். நெறியல்லா நெறிதன்னை நெறி யாக நினைந்து சிறு நெறிகளில் சென்று இன்பம் போலக் காட்டித் துன்பத்தில் அழுத் தும் புலவின்பங்களில் உயிர்கள் மயங்காமல், பேரின்பத்தை நுகர்வதற்கான இறைவன் வன்முறைகளைக் கையாளுவது போலவும் தோற்றலாம.

நன்மை தராத உணவில் குழந்தையின் நாட்டம் சென்று, நன்மை தரக்கூடிய உணவை அது ஏற்க மறுத்தால், தாய்அக்குழந்தையை அடித்தாயினும் உண்பிப்பாள். இம்முறையில் தான், இறைவன் துன்ப நிகழ்ச்சிகள் போலத் தோன்றுவனவற்றின் மூலமாகப் புலன்வழி வரும் நிலையிலா இன்பத்தை விட்டு நிலை யான பேரின்பத்தை நுகர வைக்கிறான். அறிவு படைத்த உயிருக்கு நன்மை தீமைகள் யாவை எனத் தெரிய வேண்டும். தீயனவற்றைவிடுத்து நல்லனவற்றை மேற்கொள்ள வேண்டும். அவ் வாறு மேற்கொள்ளாத நிலையிலும், இறை வன் உயிர்கள்மீது வைத்த நேசத்தினால் வலிய வந்து ஆட்கொள்கிறான். அவன் பணி பிழைத்தால் புளியம் வளாரால் மோதுவிக் கிறான், முனிகிறான். உளம் திருந்தினால் உவக்கிறான். இவ்வாறெல்லாம் தன்னைவிட்டு விலகிச் செல்லும் உயிர்களை அவன் விருப்பி வந்து ஆட்கொள்ளும் அற்புதம், அடித்தா யினும் அக்காரம் தீற்றும் அற்புதம் என்பது மாணிக்கவாசகரின் திருவுள்ளம்.

# முத்தொகை வாழ்த்துக்கள்

திரு டாக்டர் வ. சுப. மாணிக்கம், M.A., Ph.D., D.Litt.,

எட்டுத் தொகையுள் ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு மூன்றுக்கும் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல்கள் சிவன்மேலன என்பது தெளிவு. இவற்றால் அறியலாகும் சைவவுண்மைகளை ஒருங்குசேர்த்துக் காண்போம்.

குறுந்தொகைக்கு முருகன் மேலும், நற்றிணைக்கு மாயோன் மேலும் இப்பெருந்தேவனார் வாழ்த்துப் பாடியுள்ளார். நற்றிணைக் கடவுள் வாழ்த்து மாயோன் மேலாகும் என்ற பின்னத்தூரார் கருத்து, உரைவேந்தர் ஔவை துரைசாமி பிள்ளைக்கு உடன்பாடில்லை. 'எரியெள்ளுவன்ன நிறுத்தன்' என்பது பதிற்றுப் பத்து வாழ்த்தாக இருக்கலாம் என்று பலர் கொள்ப. இதுவும் சிவன் மேலது. பாடினோர் பெயர் தெரியவில்லை. கலித்தொகைக் கடவுள் வாழ்த்து சிவனைப் பற்றியது. நெய்தற்கலி பாடிய நல்லந்துவனாரே இவ்வாழ்த்துப் பாடியவர். பரிபாடற்குக் கடவுள்வாழ்த்து என ஒன்றில்லையெனினும், 'ஆயிரம் விரித்த அணங்குடை' என்ற திருமால் பாடலைக் கடவுள் வாழ்த்தாகக் கொள்ளலாம். பத்துப்பாட்டுக்கும் முதலில் உள்ள திருமுருகாற்றுப்படை கடவுள் வாழ்த்தாகலாம். இவ்வாறு எட்டுத்தொகைக்கும் பத்துப்பாட்டுக்கும் ஓராற்றால் கடவுள் வாழ்த்துக்கள் உள என்று அமைதி கொள்வோம்.

தாம் எழுதமுற்பட்ட நூல் இனிது முடிதற்பொருட்டு நூலின் முகத்தே கடவுள் வாழ்த்து வைக்கும்முறை இடைக்கால வழக்கு என்பதனை இலக்கிய வரலாற்றில் அறிகின்றோம். கடல்கோளாலும் பிறவற்றாலும் சங்க நூல்கள் பல அழிந்தொழிந்த அச்சத்தால், கடவுள் வாழ்த்து பிற்காலத்து நூன்மரபாயிற்று என்று சொல்லலாமேயன்றிக் கடவுள் வாழ்த்து என்ற எண்ணக்கோளும் அச்சொற்றொடரும் பிற்காலத்து எழுந்தனஎன்று கொள்ளுமாறில்லை. 'கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே' என்ற தொடரும் தொல்காப்பியத்தே காணக்கிடக்கின்றது.

கடவுள் வாழ்த்துக் குறித்த சில வளர்ச்சிகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். முழுமுதற் கடவுள்தான்—தன் சமய முழுமுதற் கடவுள்தான்—கடவுள் வாழ்த்துப் பொருளாக வேண்டும் என்பது பிற்கால மரபு. சிந்தாமணி, பெரியபுராணம், இராமாயணம், சூளாமணி, வில்லிபாரதம், சீறாப்புராணம், தேம்பாவணி முதலிய காப்பியங்களிலும், வீரசோழியம், நன்னூல் முதலிய இலக்கணநூல்களிலும் இம்மரபினைக் காண்கின்றோம். எப்பொருளிலும் இருப்பவன் இறைவன் என்ற மெய்ம்மையால் பண்டைக்காலத்து எப்பொருளையும் கடவுளாக மதித்துப்பாடும் நிலை பரவியிருந்தது. இதனை,

> கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே

என்று தொல்காப்பியம் தெளிவிக்கின்றது. அதனாலன்றோ இளங்கோவடிகள் திங்கள் ஞாயிறு மாமழை பூம்புகார் நான்கினையும் நூலின் தொடக்கத்தில் போற்றிப் பாடினார். இன்னொரு வளர்ச்சியும் ஈண்டு நினையத்தகும். முன்னேயிருந்தாலும் நூலுக்குப் புறமாகக் கடவுள் வாழ்த்துப் பாடுதல் பின்னை மரபு. முற்காலத்து நூலின் ஒரு கூறாகவே இவ்வாழ்த்து அடங்கியிருக்கும் என்பதனைத் திருக்குறளிலும் சிலப்பதிகாரத்திலும் காணலாம். பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படையும் பரிபாடலில் 'ஆயிரம் விரித்த அணங்குடை அருந்தலை' என்ற திருமால் பாடலும் முதற்கண் கடவுள் வாழ்த்தாக நின்று தொகையின் கூறுகளாகின்றன. எனவே நூலக வாழ்த்து, நூற்புற வாழ்த்து என்ற இருவகைப் பாங்குகளைக் கடவுள் வாழ்த்து காட்டுகின்றது.

பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துக்கள் நூற்புறஞ் சார்ந்தன. சங்கப் பாடல்களைத் தொகை செய்தகாலத்து, நூற்கள் வாழக் கடவுள் வாழ்த்து வேண்டும் என்ற

கோள் வலுப்பெற்றது. அங்ஙனம் எல்லாத் தொகைக்கும் பாடும் பெருமையைத் தொகை செய்தோர் பெருந்தேவனார் ஒருவர்க்கே அளித்தனர். அவர் சங்க மரபையும் தொகை யளவையும் உட்கொண்டு, ஐங்குறுநூற்றுக்கு மூன்றடியிலும் நற்றிணைக்கு ஏழடியிலும், அக நானூற்றுக்குப் பதினாறு அடியிலும் கடவுள் வாழ்த்து யாத்தலர். சங்கவிலக்கியத்தில் பௌத்தத்துக்கும் சமணத்துக்கும் அத்துணை ஆட்சியில்லையாதலாலும், சிவநெறிக்கே ஆட்சி மிகுதியாக இருந்ததாலும் நடுநிலை கோடாது சிவனுக்கே மிகுதியான கடவுள் வாழ்த்துப் பாடல்கள் செய்தனர். பெருந்தேவனார் காலத்துக் கணபதி வழிபாடு புகுந்திருக்கலாம் என்று கொண்டாலும் சங்கவிலக்கியத்தில் அதற்கு இடமின்மையின் அதற்கு வாழ்த்துப் பாடவில்லை. முருகப் பெருமான் சங்ககாலத்தெய்வமாக இருந்தமையின் குறுந்தொகைக் கடவுள் வாழ்த்து அவனுக்கு உரியதாயிற்று. ஔவை துரைசாமி பிள்ளையின் குறிப்புப்படி, நற்றிணையும் சிவன் மேலது என்று கொண்டால், 'எரியெள்ளுவன்ன நிறத்தன்' பாடல் பெருந்தேவனார் பாடியது என்று கொண்டால், எட்டுத் தொகையுள் ஐந்து சிவன்மேலவாம். எனினும் பெருந்தேவனார் பாடியன என்று தெளிவாக அறிந்த ஐங்குறுநூறு, அகநானூறு புறநானூறு என்ற முத்தொகைக் கடவுள் வாழ்த்துக்களைச் சைவநெறிபற்றிச் சிந்திப்போம்.

'நீலமேனி வாலிழை பாகத்தொருவன்' என்ற ஐங்குறுநூற்றுக் கடவுள் வாழ்த்தும், 'கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்' என்ற அகநானூற்று வாழ்த்தும், ''கண்ணி கார் நறுங் கொன்றை' என்ற புறநானூற்று வாழ்த்தும் ஒரே பாங்கில் அமைந்தவை. இறைவனுடைய புறவுருவத் தோற்றமும் அத்தோற்றத்துக்குரிய உறுப்புக்களும் கருவிகளும் நம் கண்முன் சொல்லோவியமாக வடிக்கப்படுகின்றன. தெய்வத் தோற்றப் புனைவே இம் முப்பாடல்களின் நோக்கம். ''உயிரா வண மிருந்து உற்றுநோக்கி உள்ளக் கிழியின் உரு வெழுதி'' என்று தேவாரம் பாடுமாறு சிவக் கோலம் நம் நெஞ்சில் விழும்வண்ணம் இம் முப்பாடல்களும் இறைவனது உறுப்புக்களை அணி செய்கின்றன. அதனாலன்றோ சமணர் எனப்படும் உரையாசிரியர் இளம்பூரணர்கூட அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தில் நெஞ்சமுந்தியவராய் ''யாழ்கெழு மணிமிடற்று அந்தணனது சிவானுபூதியில் பேருலகம் தங்கிற்று'' என முழுமுதன்மை காட்டினார். ''இஃது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது'' எனவும் பேராசிரியர் உலகப் பொதுமை சுட்டினார்.

கொன்றை மாலை, பூணூல், நெற்றிக் கண், கணிச்சி, மழு, வேல், செந்நிற மேனி, வாலெயிறு, புரிசடை, இளம்பிறை, விடையூர்தி, ஊர்திக்கொடி, புலித்தோல், கரகம், மணிமிடறு, நீலமேனிபாகம் என்ற பொருள்கள் சிவன் பகுதிகளாக இடம் பெறுகின்றன. அகமும் புறமும் நீண்ட பல அடிகள் உடையன வாதலின் உறுப்புக்கள் பல சொல்ல இடமுண்டு. ஐங்குறுநூறு சிலவடியது ஆதலின் முதன்மையான ஒன்றைத்தானே கூறவேண்டும்? கூற முடியும். அம்முதன்மை என்ன? அம்மையப்பன் வடிவம். பிற எத்தெய்வத்துக்கும் இல்லாத உருவம் இது. அத்தனைச் சிறப்புகருதி,

> ''நீல மேனி வாலிழை பாகத்
> தொருவன் இருதாள் நிழற்கீழ்
> மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே''

என்று சத்தி சிவவுருவைப் பாடினார் பெருந் தேவனார். ''பெண்ணுரு ஒருதிறனாகின்று'' என்று புறநானூற்றிலும் 'சேர்ந்தோள் உமையே' எனப் பெயர்சுட்டி அகநானூற்றிலும் நினைவூட்டினார். முத்தொகைக்கடவுள் வாழ்த்துப் பாடல்களிலும் இடம்பெறும் தலையாய சைவநெறி, மாதொரு கூறன் என்பது. அனைத்துச் சைவமெய்ம்மைகட்கும் மாதொரு பாகம் அடி முதலாதலாலும், அவனருள்என்பது உமையம்மையாதலாலும், பெருந்தேவனார் இவ்வுண்மையை நிறைமொழிந்தார்.

பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்திலும் 'இரண்டுருவாய் ஈரணிபெற்ற எழிற்றகையன்' என்று மங்கைபங்கு குறிக்கப்படுகின்றது. நல்லந்துவனார் கலித்தொகைக் கடவுள் வாழ்த்தில்,

> ''பாணியும் தூக்கும் சீரும் என்றிவை
> மாணிழை யரிவை காப்ப
> ஆணமில் பொருளெமக் கமர்ந்தனை யாடி''

என்றாங்கு, சத்தியும் சிவமுமாய உடனிலை போற்றப்படுகின்றது.

'சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனியெம்மான்' என்று அறுதியிட்டு உரைப்பர் அப்பரடிகள். 'செவ்வானன்ன மேனி' எனச் செம்மேனி இடம் பெற்றதேயன்றிச் சிவன் என்னும் பெயர்ச் சொல் இக் கடவுள் வாழ்த்துக்களில் இடம் பெறவில்லை. அந்தணன், அருந்தவத்தோன் என்ற பொதுப் பெயர்களே ஆளப்பெற்றன. 'மந்திரமாவது நீறு' என்பர் திருஞானசம்பந்தர். 'பூசு நீறு போல் உள்ளும் புனிதர்கள்' என்பர் சேக்கிழார். கொன்றை, வெள்ளிய பூணூல், நெற்றிக்கண் இவற்றைப் பெருந்தேவனார் குறித்தனரேயன்றித் தூய வெண்ணீறுதுதைந்த மேனியைக் குறிக்கவில்லை. யாழ்கெழு மணி மிடறு பாராட்டப்படுகின்றதேயன்றி, நமச்சிவாய வாழ்க என்ற ஐந்தெழுத்து குறிப்பாகவும் சொல்லப்படவில்லை. கி.பி. நாலாவது நூற்றாண்டில் பாடப்பெற்றனவாகக் கருதத்தகும் இக்கடவுள் வாழ்த்துப் பாடல்களில் சிவன், திருநீறு, திருவைந்தெழுத்து, என்ற முக்குறிப்பும் இன்மை பெருஞ் சிந்தனைக்குரியது. 0

# வடமதுரைப் பிறந்த மாயன்

திரு ந. சுப்பு ரெட்டியார், M.A., Ph.D.,

''மகாபாரதத்தால் தூது போனவன் ஏற்றம் செல்லுகிறது'' என்பது ஸ்ரீவசனபூஷணத்தில் ஒரு வாக்கியம். இதனைச் சிந்திக்கின்றோம். இங்கு சர்வேசுவரன் என்று சொல்லாமல், 'தூதுபோனவன்' என்று கூறியதால் அவன் அடியார்களுக்குப் பரதந்திரப்பட்டிருக்கும் தன்மை தெளிவாகின்றது. தேவதேவனான தன்னுடைய பெருமையும், செய்கின்ற தொழிலின் சிறுமையும் பாராமல் பாண்டவர்களுக்காகக் கழுத்திலே ஓலை கட்டித் தூதுபோனமை அடியார்க்குப் பரதந்திரனாய் இருக்கும் தன்மையில் உள்ள 'ருசி'க்கு வசப்பட்டிருந்தமையாலன்றோ? அடியார்களுக்குப் பரதந்திரனாக இருக்கும் இத தன்மைதான் அவனை அடைவதில் உள்ள எளிமையைக் காட்டுகின்றது. எம்பெருமானின் இந்த எளிமைக் குணத்தின் மேன்மையில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்த திருமங்கையாழ்வாரும்,

> பெருநிலத்தார்
> இன்னார் தூதன் எனநின்றான்'
>
> 'கோதுஇல் செங்கோல்
> குடைமன்னர் இடைநடந்த
> தூதா..'

என்று பெருமையுடன் பேசுகின்றார். இச்சை காரணமாக எம்பெருமான் தன்னடியார்கள் திறத்தில் செய்யும் தாழ்ச்சி எல்லாம் இவனுடைய ஏற்றத்திற்குக் காரணமாக அமைந்தன; இவை இவனுக்கு ஒளியையும் தருகின்றன. நீர்மைக்கு எல்லை நிலமான கிருட்டிணாவதாரத்தில், பரத்துவத்திற்குச் சமமாகச் சொல்லக் கூடிய நிலைகளையெல்லாம் விட்டொழித்து,

> 'மத்துறு' கடைவெண்ணெய் களவினில்
> உரலிடை யாப்புண்டு
> எத்திறம், உரலினோடு இணைந்திருந்து
> எங்கிய எளிவே'

என்று நம்மாழ்வாரும் இந்த எளிமைக் குணத்தில் ஈடுபட்டுப் பேசுகின்றார். இவ்வாறுபேசும் போது இந்த ஆழ்வார் ''மூவாறுமாசம்மோகித்துக்'' கிடந்தார் என்று 'ஆசாரிய இருதயம்' குறிப்பிடுகின்றது. கூரத்தாழ்வானும் தனது அதிமானுஷஸ்தவம்' என்ற நூலில் இதனை எடுத்துக் காட்டுகின்றார்.

மதுரை (Muttra) இரயில் சந்திப்பில் தங்கும் அறையொன்றில் தங்கியிருக்கும் நம்முடைய மனத்தில் மேற்குறிப்பிட்டவாறு சிந்தனையோட்டம் நிழலிடுகின்றது. அதிகாலையில் எழுந்து நீராடி நல்லாடை புனைந்து சிற்றுண்டிக்குப் பிறகு வடமதுரைக்குப் புறப்படுகின்றோம். தோங்காவில்-இந்த நகரம் இரயில் நிலையத்திலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவில் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடும் யமுனை நதிக்கரையில் உள்ளது. இது கண்ணன் அவதாரம் செய்த திருத்தலம். முத்தி தரும் நகரங்கள் ஏழினுள் இதுவும் ஒன்று. கண்ணுக்கு மதுரமாயிருத்தலாலும், மது என்ற அசுரனை அழித்த இடமாதலாலும் இதற்கு மதுரை எனப் பெயர் வந்தது என்று கூறுவர்.

யமுனை நதியின் தென் கரையில் திருத்தலப் பயணிகள் வசதியாக நீராடுவதற்கு நல்ல படித்துறையொன்று அமைக்கப்பெற்றுள்ளது. இங்குள்ள பண்டாக்கள் பொய்யும் புனைசுருட்டுமாகக் கண்ணன் பிறப்பைப்பற்றிக் கூறும் செய்திகளை நம்ப வேண்டியதில்லை. கண்ணனைப்பற்றிய பழங்கால இடங்கள் யாவும் முகம்மதியர்களின் படையெடுப்பின் பொழுது அழிக்கப்பெற்றன. ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த திருக்கோயில்கள் இன்று ஒன்று கூட இல்லை. பிற்காலத்தில் எழுந்த கட்டடங்களும் பாழடைந்து கிடக்கின்றன. கண்ணனுக்குரிய கேசவ தேவர் மந்திர் என்ற திருக்கோயில் இன்று இல்லை. அந்த இடத்தில் ஒரு பெரிய மசூதியைக் காண்கின்றோம்.

இன்று இந்த மசூதியைச் சுற்றி மூன்று பக்கங்களிலும் ஒரு பெரிய கட்டடம் பலகோடி ரூபாய் செலவில் எழும்பியுள்ளது. இங்குக் கண்ணனுக்குத் தனிக்கோயில் மிக அழகான முறையில் பளிங்குக் கற்களால் கட்டப்பெற்றுள்ளது. இக்கோயிலிலுள்ள கிருஷ்ணனின் சிலை கண்டாரை ஈர்க்கும் பாங்கில் உள்ளது. இச்சிலை வடிவம்தான் ஆண்டாள் குறிப்பிடும் ''மாயன்; வடமதுரை மைந்தன்'' என்று நினைத்து வழிபடுகின்றோம். இப்பெருமானைத்தான் ஆண்டாள், திருமங்கை ஆகிய ஆழ்வார் பெருமக்களும் மங்களாசாசனம் செய்ததாகக் கற்பனை செய்து கொள்ளுகின்றோம்.

''வடமதுரைப் பிறந்தாற்கு
அருள்கொள் ஆளாய் உய்யல் அல்லால்
இல்லை கண்டீர் அரணே''

''வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே
சரண்என்று உய்யப்போகல் அல்லால்
இல்லை கண்டீர் சதிரே''

''வடமதுரைப் பிறந்தாற்கு
எதிர்கொள் ஆளாய் உய்யல்அல்லால்
இல்லை கண்டீர் இன்பமே''

''வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே
சொல்லஉய்யப் போகல் அல்லால்
மற்றொன்று இல்லை சுருக்கே''

''வடமதுரைப் பிறந்தான்
குற்றமில் சீர்கற்று வைகல்
வாழ்தல் கண்டீர் குணமே''

''வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே
வீழ்துணையாப் போம்இதனில்
யாதும் இல்லை மிக்கதே''

''வடமதுரைப் பிறந்த
தாதுசேர்தோள் கண்ணன் அல்லால்
இல்லை கண்டீர் சரணே''

என்று நம்மாழ்வார் பாசுரங்களில் ஆழங்கால் பட்டுக் கண்ணனைச் சேவிக்கின்றோம்.

இத்திருக்கோயிலின் அருகில் வாசுதேவர், தேவகிக்குக் கம்சன் அமைத்த சிறையின் நினைவாக ஒரு சிறைக்கூடமும் நல்லமுறையில் சலவைக்கல்லால் அமைக்கப்பெற்றுள்ளது. கம்சவதம் நடந்த இடம், குவலயா பீடத்தின் மருப்பொசித்த இடம், கம்சவதமானதும் கண்ணன் சிரம பரிகாரம் செய்து கொண்ட யமுனைத் துறை (விச்ராந்தி கட்டம்) முதலியவை இங்குக் காணத்தக்கவை. கண்ணன் அவதரித்த பூமியிலும் விச்ராந்தி கட்டத்திலுமுள்ள திருக்கோயில்களில் மாலையில் தொடங்கி நடைபெறும் பசனையையும், மக்கள் அதில் பரவசப்படுவதையும் சொற்களால் எடுத்துக்கூற முடியாது.

மதுரை நகரினுள் துவாரகை நாதர் கோயில், மதுரை நாதர்கோயில் என்ற இரண்டு திருக்கோயில்கள் உள்ளன. இவை இரண்டும் அண்மையில் கட்டப்பெற்றவை. வடமதுரையில் பிறந்து, ஆயர்பாடியில் வளர்ந்து, வியக்கத்தக்க தனது செயல்களால் பெருமையுற்றகிருஷ்ணனுக்கு ஒரு திருக்கோயிலை எழுப்புவது நியாயந்தானே. அங்ஙனமே, துவாரகைசென்று மன்னனாக மகுடம் சூட்டிக் கொண்டு அரசோச்சியதன் வினைவாக ஒரு திருக்கோயிலையும் எமப்பியுள்ளனர் வடமதுரை மக்கள். துவாரகைநாதர் திருக்கோயில் கடைத்தெருவில் உள்ளது. இது வல்லபர் நிறுவியசமயத்தை சார்ந்த (புஷ்டிமார்க்கம்) இலட்சுமிசந்த் என்ற சேட் ஒருவரால் அதிக பொருட்செலவில் கட்டப்பெற்றது. இந்த சேட்ஜீயின் குடும்பத்தினர் தாம் பிருந்தாவனத்தில் ஆண்டாள் - அரங்க மன்னருக்கு 'அரங்கமந்திர்' என்ற திருக்கோயிலை நிறுவுவதில் துணை புரிந்தவர்கள்.

துவாரகைத் திருக்கோயிலில் கிருஷ்ணன் தனியாகக் காட்சி தருகின்றான்; கோபிமார்கள் அருகில் இல்லை; தேவிமார்கட்குத் தனிக்கோயிலும் இல்லை. முற்பகலில் நான்கு முறையும், பிற்பகலில் நான்கு முறையும் இத்திருக்கோயிலில் வழிபாடுகள் உண்டு. இப்பகுதியில் மதுரையைச் சுற்றி 168 மைல் சுற்றளவில் அமைக்கப்பெற்ற திருக்கோயில்களில் துவாரகைநாதர் திருக்கோயிலே செல்வச் செழிப்பில் திகழ்கின்றன. திருப்பதியை அடுத்து அதிகச் செல்வம் கொழிப்பது இத்திருக்கோயிலே என்று சொல்லப் பெறுகின்றது.

இங்ஙனம் பல செய்திகளை அறிந்தவண்ணம் கோவர்த்தனம் என்னும் இடத்திற்கு ஏகுகின்றோம். கண்ணபிரான் பசுக்களுக்குப் புல்லும் நீரும் நல்கி வளர்த்ததனால், அவனுக்குக் கோவர்த்தனன் என்னும் திருநாமம் உண்டு. இந்தத் திருநாமத்தை இம்மலைக்கு இட்டு வழங்கினர். இதை நினைந்து பெரியாழ்வார் ''தன்பேர் இட்டுக்கொண்டு தரணி தன்னில் தாமோதரன் தாங்குதடவரை''என்று நினைந்து போற்றுகின்றார். இம்மலை வடமதுரையிலிருந்து சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது. இந்த மலையும், கண்ணன் மாடுகள் மேய்த்த இடமாகும். இது மிக உயர்ந்த மலையன்று. ஆழகான ஒரு நீளமான சிறு குன்றே. குன்று, மரங்கள் நிறைந்து அழகாகக் காட்சி தருகின்றன. இதனை நினைந்துதான் பெரியாழ்வார்.

''குரவிற் கொடிமுல்லைகள் நின்று உறங்கும்
கோவர்த்தனம்''

என்று இம்மலையை வருணித்தனரோ என்று கருத வேண்டியுள்ளது. இந்த மலையின் சுற்றளவு சுமார் 15 கி.மீ. இருக்கும் என்று சொல்லுகின்றனர். மலையின் இருபுறங்களிலும் சிற்றூர்களும் வேளாண்மைக்குரிய ,நிலபுலங்களும் காணப்பெறுகின்றன. வல்லபாச்சாரியார்

மலையை வழிபட்டார் என்பது செவிவழிச் செய்தியாகும். ''திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே'' என்று நம்மாழ்வார் கூறியுள்ளதை ஈண்டு நாம் சிந்திக்கின்றோம். வல்லபர் இந்தக் குன்றின்மீது ஸ்ரீநாதர் கோயிலை எழுப்பினார் என்றும், முகம்மதியர்களிடமிருந்து பாதுகாத்தற் பொருட்டு இதிலிருந்த இறைவன் திருமேனியை உதயபூர் அரசு எடுத்துச் சென்றதாகவும் கூறுகின்றனர். திருப்பதி மலைக்கோயிலைப் போலவே இக்குன்றின்மீதுள்ள கோயிலும் செல்வச் செழிப்புள்ளவை. ஏராளமான திருத்தலப் பயணிகள் வந்து போகின்றனர். காணிக்கை செலுத்துகின்றனர், குன்றினையும் வலம் வருகின்றனர்.

மலையடிவாரத்தில் இலக்குமி நாராயணர் கோயில் ஒன்று உள்ளது. இராமானுசர் சம்பிரதாயப்படி வழிபாடு நடைபெறுகின்றது. இதனைத் தவிர அரிதேவர் கோவில் ஒன்று உள்ளது. இப்பகுதியிலுள்ள திருக்கோயில்களில் இது மிகப் பழமையானது. செந்நிறக் கற்களால் கட்டப் பெற்றுள்ளது. அக்பர் ஆட்சிக் காலத்தில் கட்டப் பெற்றிருக்கலாம் என்று தோன்றுகின்றது. இதன் அருகிலுள்ள திருக்குளம் ஓர் ஆறுபோல் மிக நீண்டது; மிகவும் ஆழமானது. இதில் எப்பொழுதும் நீர் இருக்கும். இதன் நாலாபுறங்களிலும் படிக்கட்டுகள் உள்ளன.

கோவர்த்தனத்தைப் பெரியாழ்வார் ஆண்டாள், நம்மாழ்வார் ஆகிய ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர். கண்ணன் திருவாய்ப்பாடியில் இருந்தபொழுது ஆயர்கள் வழக்கப்படி இந்திர வழிபாட்டுக்கென்று சமைத்த சோறு முதலியவற்றை இந்திரனுக்கு இடவொட்டாமல் கோவர்த்தன மலைக்கு இடுவித்து, பின்பு தானே ஒரு தேவதை உருவத்துடன் அவற்றை முழுதும் அமுது செய்துவிட்டான். இந்திரன் பசிக் கோபத்தினால் மேகங்களை ஏவி ஏழுநாள் கல்மாரி பெய்வித்தான். கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கிப் பிடித்துக் கோக்களையும் கோவலரையும் காத்தருளினன். இப்பெருதவியைப் பெரியாழ்வார் பெரிதாகமதித்து அவ்வரலாற்றை ஒரு திருமொழியில் விரிவாக அருளி இயியராகின்றார். மலையடிவாரத்தில்ருக்கும் நாம் இத்திருமொழியில் ஆழங்கால் படுகின்றோம். முதற் பாசுரத்தில் மலை எடுத்த வரலாறு கூறப்பெறுகின்றது.

''அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும்
தயிர்வாவியும் நெய்யளறும் அடங்கப்
பொட்டத் துற்றி மாரிப்பகை புணர்த்த
பொருமா கடல்வண்ணன் பொறுத்தமலை''

என்ற பாசுரப் பகுதியில் இந்த வரலாறு கூறப்பெற்றுள்ளதைக் காண்க.

இத் திருமொழிப் பாசுரங்களில் மலையின் வருணனையும், கண்ணன் மலை எடுத்தளமையும் கலந்து காணப்பெறுகின்றன. இவற்றில் ஆழ்வாரின் கற்பனை நயத்தைக் காணலாம். மலைக் காடுகளில் திரியும் ஒரு யானை கரை போன்று உயர்ந்துள்ள மேட்டுநிலத்தைத் தன் கொம்புகளால் குத்துகின்றது: இதனால் ஒரு கொம்பு முறிந்துபடுகின்றது. கொம்பு முறிந்த புண் வாயில் மதநீர் ஒழுகுகின்றது. தன் துதிக்கையை உயரத் தூக்கி அண்ணாந்து நிற்கும் பொழுது வானத்தில் காணப்பெற்ற இளம் பிறைச் சந்திரனைத் தான் இழந்த கொம்பாக மயங்கி அதனைப் பறித்துக் கொள்ள விரும்புகின்றது. மலையிலுள்ள பெண் யானை ஒன்று தன் குட்டியை ஒரு சிங்கக்குட்டி நலியும் பொருட்டுச் சீறினபோது, தன் குட்டியைத் தனது நான்கு கால்களினுள்ளே அடக்கி மறைத்துக் கொண்டு, அச்சிங்கக்குட்டியை எதிர்த்துப் போர் புரிகின்றது. கொல்லும் வாயையுடைய சினங்கொண்ட புலிகள், முனிவர்கள் வாழும் தழைக்குடில்களில் சென்று புக, முனிவர்கள் அப்புலிகளின் கழுத்தைச் சொறிந்து அவற்றை நின்றபடியே உறங்கச் செய்கின்றனர். மலையிலுள்ள சில பெண் குரங்குகள் இலங்கையின்மீது பாய்ந்து அதன் சீர்கெடும்படி அழித்த சிறிய திருவடியின் புகழ் பாடித் தம் குட்டிகளைத் தம் அங்கையில் கொண்டு சீராட்டிக் கண் வளரச் செய்கின்றன. முசு என்ற ஒருவகைச் சாதிக் குரங்குகள் தமது குட்டிகளைத் தம் முதுகில் கட்டிக்கொண்டு போய் ஒரு மரக்கிளையினின்றும் மற்றொரு மரக்கிளைக்குத் தாவிக் குதித்தலைப் பழக்குகின்றன. மலைவாழ் குறவர்கள் தமக்கு அன்பர்களான குறப்பெண்டிர் கொல்லையில் பரந்திருக்கக் கண்டு அவர்களின் பார்வையினால் அவற்றைத் தம் கொல்லையைமேய்ந்து அழிக்க வந்த மான்கள் எனக் கருதி அவற்றின் மீது அம்பெய்தி விரட்ட எண்ணித் தம் விற்களை வளைக்கின்றனர். சில குறப்பெண்டிர் மடமான் கன்றுகளை வலையில் அகப்படுத்திப் பின்பு அவற்றைத் தம்முடையனவாகக் கொண்டு பஞ்சுச் சுருளின் நுனியினால்பாலை எடுத்து ஊட்டி வளர்க்கின்றனர். மேகங்கள் மழை பொழிவது கடல் நீரினைக் குடங்களினின்றும் நீரைச் சொரிவதுபோல் காட்சியளிக்கின்றது. எல்லாப் பக்கங்களிலும் பரவிப் பெருகும் தெளிந்த சுனை நீர் அருவிகள், கண்ணன் அணிந்த முத்துச் சட்டைபோல் காட்சி அளிக்கின்றது. அம்மலை முகடுகளில் வெண்மேகங்கள் தங்கியிருக்கும் நிலையினை நோக்கினால் அம்மலையின்முன் நெற்றி நரை விட்டதுபோல் தோன்றுகின்றது.

இந்த மலையைக் கண்ணன் தூக்கின நிலையை ஆழ்வார் வருணிக்கும் நேர்த்தி நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. ஏழுநாள் பொழிந்த கல்மாரியைத் தாங்காமல் 'அம் மைத்தடங்கண் மடவாய்ச்சியரும் ஆனா

யரும் ஆநிரையும் அலறிக் கண்ணனிடம் சரண் புக, அவன் யானைக்குச் சோற்றுக் கவளத்தைத் திரட்டியெடுத்துக் கொடுக்கும் யானைப் பாகனைப்போல், ஒரு கையினை மலையின் வேர்ப்பற்றிலே செலுத்தி மற்றொரு கையினால் மலையின் மேலேபிடித்துத் தூக்கினான். கண்ணன் தன் திருத்தோள்களைக் குடையின் காம்பாகவும், தன்னுடைய செந்தாமரை மலர் போன்ற திருக்கையிலுள்ள ஐந்து விரல்களைக் குடைக்காம்படியில் உண்டாகின்ற கிளைக் கொம்புகளாகவும் கொண்டு மலையைக் குடையாகக் கவித்தான். கண்ணன் ஏழுநாட்களாகத் தனியாக மலையைத் தாங்கியிருந்தும் அவனுடைய இயற்கையழகும் மாறவில்லை; அவன் வாட்டமும் அடையவில்லை, திருநகங்களும் நோவு எடுக்கவில்லை. இந் நிகழ்ச்சி ஓர் இந்திரசாலம் போல்நடைபெற்றது. இந்த ஆழ்வாரே ''குன்று எடுத்து ஆநிரை காத்த ஆயா, என்னை நமன்-தமர்கள் வந்து பற்றும்போது நீ வந்து காக்கவேண்டும்'' என்று வேண்டுகின்றார். காதல் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாத நிலையிலிருக்கும் ஆண்டாள்,

> கற்றன பேசி வசவு உணாதே
> காலிகள் உய்ய மழை தடுத்துக்
> கொற்றக் குடையாக ஏந்தி நின்ற
> கோவர்த் தனத்து என்னைஉய்த்திடுமின்

என்று தன்னைக் கோவர்த்தன மலையருகே கொண்டுபோய் விடுமாறு வேண்டுகின்றாள்.

நம்மாழ்வாரும் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த நிகழ்ச்சியை,

> ''உண்ண வானவர்கோனுக்கு ஆயர் ஒருப்படுத்த
> அடிசில் உண்டதும்
> வண்ண மால்வரையை எடுத்து மழைகாத்த
> தும்
> எண்ணும் தோறும் என்நெஞ்சு எரிவாய்
> மெழுகு ஒக்கும்''

என்ற பாசுரத்தில் ஆழங்கால்பட்டு அனல் வாய்ப்பட்ட மெழுகுபோல் உருகுகின்றார். திருவரங்கப் பெருமான்மீது மோகித்த நிலையில் ஆழ்வார் பாசுரம் தாய்ப்பாசுரமாக வடிவெடுக்கையில்,

> ''கொழுந்து வானவர்க்கு என்னும் ;குன்றுஏந்தி
> கோநிரை காத்தவன் என்னும்''

என்று மகள் அநுபவமாக வெளிப்படுவதை எண்ணி நாம் அந்நிலையை எட்ட முயல்கிறோம்.

இங்ஙனம் ஆழ்வார்கள் பாசுரங்களில் ஈடுபட்டு மெய்ம்மறந்த நிலையில் திவ்விய கவியின் திருப்பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

> செல்வம் உயிர்உடம்பு
> சேர உரித்தாக்கி
> வல்வினையின் நீங்குமின்
> மாந்தர்காள்-தொல்லை
> வடமதுரை யான்கழலே
> வாய்த்த தஞ்சமென்று
> திடமதுரை செய்தான்
> திறத்து

என்பது பாசுரம், ''மாண்டர்கள், கர்மம், ஞானம், பக்தி, பிரபத்தி முதலிய வழிகளையெல்லாம் கைவிட்டு, தனதுதிருவடிகளையே தஞ்சமாகப் பற்றும்படி கண்ணன் திறத்தில் உமது உடல், பொருள், உயிர் ஆகிய அனைத்தையும் ஒரு சேர உரிமையாக்கி அப்பிரான் அருளால் இரு வினைத் தொல்லைகளினின்றும் நீங்கி உய்வு பெறுவீர்களாக'' என்று உலகத்தார்க்கு உபதேசிப்பதை நாமும் கேட்கின்றோம். சேஷபூதன் இழியும் துறை சேஷியின் திருவடிகளேயாதலால், 'கழலே வாய்த்த தஞ்சமென்று' திடமாக உரைத்ததையும் சிந்திக்கின்றோம்.

கோவர்த்தனத்தைச் சேவித்த நாம் நந்த கிராமம், பர்சானா என்ற இடங்களையும் சென்று சேவிக்க எண்ணுகின்றோம்.

## நந்த கிராமம்:

கண்ணன் புகழால் நந்தன் யசோதை இவர் தம் புகழ் ஓங்கியது. இதனை நிலை நிறுத்தும் வகையில் ஒரு சிற்றூருக்கு நந்தன் பெயரை இட்டு வழங்கியிருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது. இந்த ஊர் கோவர்த்தனத்திலிருந்து சுமார் 18 கி.மீ. தொலைவில் உள்ளது; ஒரு சிறு குன்றின் மீது அமைந்துள்ளது, இந்த ஊர். இங்குப் பாலகிருஷ்ணனுக்கு ஒரு திருக்கோயில் உள்ளது.

## பர்சானா:

நந்த கிராமத்திலிருந்து சுமார் 6 கி.மீ. தொலைவிலுள்ளது இச்சிற்றூர். இங்குள்ள ஒரு சிறு குன்றின்மீது இராதைக்கு ஒரு திருக்கோயில் உள்ளது. இஃது 'இராதை கோயில்' என்றே இராதையின் பெயரில் வழங்கி வருகின்றது. தமிழர்களின் கண்ணன் நப்பின்னைப் பிராட்டியைவிரும்பியதுபோலவே வடநாட்டுக் கிருஷ்ணன் இராதையைவிரும்பினான் என்பதை நாம் அறிவோம்.

இதைத் தவிர இவ்வூரின் அருகில் 'சங்கேத பீகாரி' என்ற ஒரு திருக்கோயில் உள்ளது. இரண்டு சிற்றூர்கட்கு இடையில் கிருட்டிண னும் இராதையும் சந்தித்தனர் என்றும், இந்தக் 'குறியிடத்தின்' நினைவாகவே இக்கோயில் எழுப்பப் பெற்றது என்றும், அப்பகுதி மக்களின் செவி வழிச் செய்தியாகும். 'சங்கேதம்' என் றால் குறிப்பு என்பது பொருள். பீகாரி என்பது கண்ணனைக் குறிக்கும் குறியிடத்தில் நினைவாக எழுப்பப் பெற்றதால் 'சங்கேத பீகாரி' என்று இத்திருக்கோயில் பெயர் பெற் றது.

இங்ஙனம் பல்வேறு வகைகளில் பக்தி அநுபவம் எய்தப் பெற்ற நாம், கண்ணன் அவ தார காலத்தில் இருப்பதுபோன்ற நினைவு ஏற்படுகின்றது. மனநிறைவுடன் நம் இருப்பி டத்திற்குத் திரும்புகின்றோம்.

***

## குருநானக் (கி.பி. 1469—1538)

இவர், இந்தியாவில் வடமேற்குப் பகுதியில், முதன்மையாகப் பஞ்சாப் மாநிலத்தில், மிகுதியாகப் பரவியுள்ள 'சீக்கியம்' என்னும் மதத்தினை நிறுவியவர் ஆவார். சீக்கிய மதம் கடவுளைக் குருவாகக்கொண்டு போற்றும். சீக்கியம் என் னும் சொல் சிஷ்யநெறி எனப் பொருள்படும். கி.பி.1469ஆம் ஆண்டில், ரவி நதிக் கரையில், லாகூர்க்கு அருகேயுள்ள தால்வண்டி என்னும் இடத்தில், க்ஷத்திரிய குலத்தில், குருநானக் பிறந்தார். தந்தையார் ஓர் இந்து; அவர் ஓர் இசுலாமிய ரிடம் வேலை செய்து வந்தார். இந்து சமயக் கூறுகளும், இசுலாமியக் கூறுகளும், சீக்கிய மதத்தில் கலந்து சிறந்து விளங்குவதற்கு, இஃதும் ஓர் அடிப்படையாக அமைந்தது போலும்! இவருக்குக் குழந்தைப் பருவத்திலேயே, இறைவழிபாட்டில் ஈடுபாடு மிகவும் ஏற்பட்டிருந்தது. இவர் எப்போதும் துறவிகள், தூயோர்கள், ஆகி யோரின் சூழலையும், நட்பையுமே நாடி நின்றார். இளமையிற் சில காலம் உற வினர் வற்புறுத்தியதனால், இல்லற வாழ்வில் இருந்தார். இரண்டு குழந்தைகள் பிறந்தன. ஆயினும் இவரது உள்ளம் இறையருளையே நாடி விழைந்து நின்றது.

ஒருநாள் இவர் காட்டிற்கு ஓடி மறைந்தார். அங்கே தியானத்தில் இருந்த போது, கடவுட் காட்சி கிடைத்தது. ''நாம செபம் செய், தருமம் புரி, வழிபாடு இயற்று, தியானத்தில் அழுந்து, அனைவருக்கும் இறையருளைப் பரப்பு, குருவாக விளங்கு'' என இறைவன் தமக்கு ஆணை பிறப்பித்ததாக இவர் உணர்ந்தார். துறவறம் மேற்கொண்டார். நெற்றியில் குங்குமம் அணிந்து, தலையில் ஒரு தலைப் பாகை தரித்து, அரையில் எளிய ஆடை உடுத்து, எங்கணும் சென்று இறையருளின் திறனைப் பரப்ப முற்பட்டார். மர்த்தனர் என்னும் இசுலாமிய இசைவாணர் ஒரு வர் இவருடன் இருந்து, மாணவரானார். நானக் தமது கருத்துக்களைச் செய்யுட் களாகப் பாடுவார். மர்த்தனர் அவற்றை இன்னிசைக் கருவியில் இனிதாக இசைப் பார். இங்ஙனம் இறைவனின் அருள் நலனை, 'நாளும் இன்னிசையாற் பரப்பும்' நற்பணியில், நானக் ஈடுபட்டு வந்தார். காசியில் இருந்து மெக்கா வரையிலும், பல இடங்களுக்கும் நானக் பயணம் புரிந்ததாகக் கூறப்படுகின்றது. இவர் தமது இறுதிக் காலத்தைக் கர்த்தார்பூர் என்னும் இடத்திற் கழித்தார். கி.பி.1538ல் மறைந்தார்.

சாதி சமய வேறுபாடுகள் பொருளற்றவை என்றும்; எல்லாருக்கும் ஈசன் ஒருவனே என்றும்; அவனை வாயினாற் பாடி, மனத்தினால் சிந்தித்து வழிபட்டு, அவனருள் பெற்று அவனை அடைவதே மனிதப் பிறவியின் பயன் என்றும், நானக் தாம் சென்ற இடமெல்லாம் நன்கு விளக்கினார். ''பிரம்மம் பரப்பிரம்மம் பரமேசுவரன் நாராயணன் கோவிந்தன் அரி அல்லா முதலிய பெயர்கள் யாவும் வேறுபாடின்றி, ஒரே கடவுளையே சுட்டுவனவாகும். வீடுபேறு அடையச் சடங்கு களும் யாகங்களும் செய்யத் தேவையில்லை. கடவுள் உருவம் அற்றவர். அவரை அறிவதற்கு ஆசிரியர் (குரு), மிகவும் இன்றியமையாத துணை ஆவார். உலக வாழ்வு நிலையற்றது, பயனில்லாதது, வெறும் பொய்யாய்க் கனவாய்ப் போவது. மனிதன் தனக்கென ஓர் ஆற்றலும் துணையும் உடையவன் அல்லன். உயிர்களின் வாழ்வை உருவாக்கி இயக்கும் ஊழ் என்னும் இயற்கை நியதி ஒன்று உண்டு. கட வுள்பாற் செய்யும் பக்தியினால் மட்டுமே, மனிதன் உய்திபெறமுடியும் என்றெல் லாம் யாவர்க்கும் எடுத்துரைத்தார்.

—ஆசிரியர்

# முத்திநிலை பற்றிய அத்வைதக் கருத்து

*'வேதாந்த வித்தகர்'*

திரு. டாக்டர் டி. எம். பி. மகாதேவன், எம்.ஏ.,பி.எச்டி.,

முத்தி பெறுதலே வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை இந்தியர்கள் வற்புறுத்துவதே இந்தியக் கலாசாரத்தைத் தற்கால மனிதனுக்கு மிகப் பொருத்தமாகச் செய்கிறது. முத்தி அல்லது மோட்சம் என்பது, இந்தியாவில் பெரும்பான்மையினரின் கருத்துப்படி. இறந்தபின் வேறொரு உலகத்தில் ஏற்படும் அனுபவம் அன்று; அது ஆன்மாவின் நிரந்தர இயற்கையாக உள்ள மேலான இன்பம். பூர்ணத்துவம் ஆகிய பேரின்பத்தைத் தேடி நாம் எங்கோ செல்ல வேண்டியதில்லை. அது நம்முள்ளேயே இருக்கின்றது; அதன் பக்கமாக நாம் திரும்பினால் அதனைக் காணலாம். அளவுக்கு மீறிப் புறத்தில் இன்று மனம் அலையும் மக்களுக்கு; அகவயமாதல் பற்றிய இந்த அறிவுரையை விடச் சிறந்தது வேறொன்றும் இருக்க முடியாது. அந்தராத்மாவே உலகில் எங்கும் உள்ள மனிதன். ''ஆத்மாவுக்கு மேல் ஒன்றும் கிடையாது. அதுவே முடிவு. அதுவே இறுதியான லட்சியம்'' என்று கடோபநிஷத் கூறுகிறது.

ஆத்மா மோட்சத்தின் தன்மையானது. அத்வைதத்தில் ஆத்மா, மோட்சம் என்னும் இரண்டு சொற்களுக்கும் பொருள் ஒன்றே. ஆத்மா எப்பொழுதும் ஸ்வதந்திரமாயிருப்பது. ஸ்வதந்திரமே அதன் இயற்கை; அவித்தையின் காரணமாக இவ்வுண்மை உணரப்படுவதில்லை. மோட்சமடைவதற்காகச் செய்ய வேண்டுவது அவித்தையைப் போக்குவது மட்டுமே. இவ்வுண்மை, பந்தமாகவுள்ள சம்சாரத்தை நீக்குவதற்கும் பொருந்தும். அவித்தையை நீக்கும்போது மோட்சம் அடையப் பெறுவதாகவும், பந்தம் நீக்கப் பெறுவதாகவும் கூறுகிறோம் என்பது உண்மையே. ஆனால் 'அடையப்பெறுவது' 'நீக்குவது' என்னும் சொற்களை உருவகமாகக் கொள்ள வேண்டும். அடைவது இருவகையானது. நீக்குவது இருவகையானது. அடையாததை அடைவதும் முன்னரே அடைந்ததை அடைவதும்; நீக்கப் பெறாததை நீக்குவதும், முன்னரே நீக்கியதை நீக்குவதும், இவற்றுள் ஒவ்வொன்றிலும் முதல் வகைக்குச் செயல் கட்டாயமாகிறது; இரண்டாவது வகையான அடைவதற்கும் நீக்குவதற்கும் அவ்வாறு அன்று. இதனைப் பின்வருமாறு விளக்குவோம். பொன்னால் ஒரு நகை செய்வதற்குச் செயல் தேவை. இதற்கான பணம் சேர்ப்பது மட்டும் போதாது. பொன்னை வாங்கி நகை செய்யவோ, பொற்கொல்லனிடம் சென்று நகை வாங்கவோ வேண்டும். இது அடையப் பெறாததை அடைகின்றதற்கு எடுத்துக் காட்டு. அடுத்த வகைக்கு உதாரணம் பின்வருமாறு. அவனுடைய கழுத்தில் அணிந்து கொண்டிருக்கிற தங்கச் சங்கிலி காணாமற் போய்விட்டதாக ஒருவன் நினைத்துக் கொள்கிறான். சங்கிலி அவன் கழுத்தில் தான் இருக்கிறது; ஆனால் அவன் மருட்சி நிலையில் இருக்கிறான். அவன் சங்கிலியைத் தேடத் தொடங்கி விடுகின்றான்.

வழிப்போக்கன் ஒருவன் இந்நிலையைப் பற்றித் தெரிந்து கொண்டவுடன், தங்கச் சங்கிலி கழுத்திலேயே இருப்பதை மருட்சியடைந்தவனுக்குச் சுட்டிக் காட்டுகின்றான். அவன் சங்கிலியை இறுகப் பிடித்துக் கொள்கிறான். மகிழ்ச்சியில் குதிக்கிறான். 'என்னுடைய அருமையான சங்கிலியை மீண்டும் பெற்றுவிட்டேன்' என்று கூச்சலிடுகிறான். இது முன்னரே அடையப் பெற்றதை அடைவதற்கு எடுத்துக் காட்டு. இந்நிலையில்இருந்தவன் சங்கிலியை மீண்டும் பெறுவதற்குச் செய்ய வேண்டியது ஒன்றும் இல்லை. அவனுக்குத் தேவையானது, சங்கிலி காணாமற் போகவில்லை என்னும் அறிவு மட்டுமே. நீக்குவது இருவகையானது என்று கூறினோம். உண்மையான பாம்பை அழிப்பதற்குத் தடியால் அடிப்பது போன்ற செயல் தேவைப்படுகிறது; இது முதல் வகைக்கு எடுத்துக் காட்டு. கயிறாக உள்ள பாம்பை அழிப்பதற்கு எவ்வளவு அடித்தாலும் பயனில்லை. போதிய வெளிச்சமே தேவைப்படுகிறது. இது இரண்டாம் வகையான நீக்குவதற்கு எடுத்துக்காட்டு. இனி மோட்சம் 'அடைவது' 'சம்சாரத்தை நீக்குவது' என்பவற்றை இங்கே இரண்டாம்

வகையான உருவகப் பொருளில் கொள்ள வேண்டும். மோட்சம் என்றும் உள்ளது. எனவே எப்போதுமே அடையப் பெற்றிருப்பது அவித்தையின் காரணமாக அது அடையப் பெறாததைப் போல் தோன்றுகிறது. ஞானம் உதிக்கும்போது அதன் நிரந்தர இயற்கை வெளிப்படுகிறது. இவ்வாறே அவித்தை யினால் உண்டாக்கப் பெற்ற பந்தமும்உண்மை யன்று. ஞானம் உதயமாகும்போது பந்தம் முன்னரே நீக்கப்பெற்றிருப்பதால் நீக்கப் பெறுவதைப் போல் தோன்றுகிறது. இவ்வகை யில் மோட்சம் அடைவதற்கும், பந்தத்தை நீக்குவதற்கும் தேவைப்படுவது ஞானமே, செயலன்று என்பது தெளிவாகும்.

தம்முடைய மாண்டூக்ய காரிகை -பாஷ்யத்தில் ஸ்ரீசங்கரர் பின்வருமாறு கூறுகிறார்:

''சீவர்கள் அவித்தையால் ஏற்படுத்தப் பெற்ற பந்தத்தால் ஒருபோதும் மறைக்கப் பெறுவதில்லை. அவர்கள் எப்போதுமே பந்தத்திலிருந்து விடுபட்டிருக்கிறார்கள். தொடக்கத்திலிருந்தே அவர்கள் விடுதலை பெற்றவராய் இருக்கிறார்கள். பரிசுத்தமான இயற்கையுடையவர்களாகவும் ஞானத் தெளிவுடையவர்களாகவும் இருக்கிறார்கள். எனவே அவர்கள் எப்போதும் பரிசுத்தமாக ஞானமயமான ஸ்வதந்தரமான உள்பொருளின் இயற்கையை உடையவர்கள். இஃது இவ்வாறாயின் உண்மையை யறிந்த ஆசிரியர்கள் தாங்கள் விடுதலை பெற்றதாக ஏன் கூறுகிறார்கள்?இதற்குப் பதில் வருமாறு: எப்போதுமே ஒளிமயமான சூரியன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது என்று சொல்வதைப் போலவும் எப்போதும் அசைவில்லாமல் இருக்கும் குன்றுகள் நின்று கொண்டிருக்கின்றன என்று சொல்வதைப் போலவும் இங்கேயும் கூறுகிறோம்''— மாண்டூக்ய காரிகா—4-98.

மேலும் 'ஆத்மபோதம்' என்னும் நூலில் அவர் கூறுவதாவது: ''அவித்தையின் காரணமாக, ஆத்மா எப்போதுமே அடையப் பெற்றிருப்பினும் அடையப்படாததுபோல் தோன்றுகிறது; அந்த அவித்தை நீங்கும்போது அடையப் பட்டதைப் போல் வெளிப்படுகிறது. தன் கழுத்திலேயே உள்ள நகையைப் போல''.

ஆத்மாவின் உண்மையை ஏற்கின்ற கொள்கைகள் யாவுமே (பிறப்பு இறப்புப் போன்றவை), ஆத்மாவைப் பற்றியன அல்ல. அது மாறுதல் இன்றி எப்போதும் உள்ளது என்பதை ஒப்புக் கொள்ளுகின்றன. ஆனால் சற்றும் பொருத்தமில்லாமல் பன்மைக் கொள்கைகள் ஒவ்வொரு உடலுக்கும் தனியாக ஓர் ஆத்மா இருப்பதாகவும், அது பந்த நிலையில் உண்மையாகவே தன்னுடைய மாறாத் தன்மையையும் பூர்ணத்துவத்தையும் இழப்பதாகவும் விடுதலை பெறும்போது இவற்றை மீண்டும் புதிதாகப் பெறுவதாகவும் கூறுகின்றன. நெருப்பில் சூட்டைப்போல ஆத்மாவுக்கு உண்மையாகவே பந்தம் உண்டெனின், மோட்ச நிலையிலும் பந்தம் ஆத்மாவை விட்டு நீங்காது. எனவே ஆத்மா என்னும் கருத்திலேயே அது எப்போதும் ஸ்வதந்திரமாகவும், பரிசுத்தமாகவும் சம்பூர்ணமாகவும் இருப்பதென்பதும், பந்தத்தை உருவாக்கும் இவற்றுக்கு மாறான பண்புகள் அவித்தையினால் போலியாகத் தோற்றுவிக்கப்படுகின்றன என்பதும் உட்கிடையாகஉள்ளன. ஆன்மாவின் உண்மைநிலையை உணர நாம் செய்ய வேண்டுவது எல்லாம் அவித்தையை நீக்குவதேயாகும்'' - பகவத்கீதை. ஸ்ரீசங்கரர் பாஷ்யம் (13—2).

இந்தியாவில் உள்ள 'தத்துவக் கொள்கை'களுள், மோட்சம் என்பது பலவாறாகக் கருதப்படுகிறது. சிலர் கருத்துப்படி, மோட்சம் என்பது துன்பமின்றியிருப்பதே. வேறு சிலர் துன்ப நீக்கத்தோடு நிரதிசய இன்பத்தை அனுபவிப்பதே மோட்சம் எனக்கருதுகிறார்கள். சாங்கியமும், நியாய வைசேடிகமும் முதல் வகுப்பைச் சேர்ந்தவை; வேதாந்தத்தைச் சார்ந்தவை, பின்னைய வகையைச் சார்ந்தவை. சாங்கியர், புருஷன் தோற்றத்துக்கு மூலமாயுள்ள பிரகிருதியினின்று வேறுபட்டது என்பதை உணர்வதே முத்தி என்பர். புருஷன் பிரகிருதியுடனும், அதனினின்றும் வெளிவந்த பொருள்களுடனும் மேலும் தன்னை ஒன்றாகக் கருதிக் கொள்வதில்லை; அது சாட்சியாகவே இருந்து, பிரகிருதியினால் தூய்மையிழக்காமல் இருக்கிறது.

இந்நிலை, கைவல்யம்- தனிமையாகவே இருப்பது எனப் பெயர் பெறும். நியாய வைசேடிகர் கொள்கைப்படி, ஆன்மா விடுதலையடையும்போது ஞானம் முதலிய எல்லாக் குணங்களிலிருந்தும் விடுபடும். துன்ப நீக்கமே முத்தி எனவும், இன்ப அனுபவம் இல்லை எனவும் கருதும். ஏன் இவ்வாறு கொள்ளப்படுகிறது என்றால், நாம் இன்பம் அடையும்போது துன்பக் கலப்பில்லாமல் அடைவதில்லை. ஆகவே துன்பமில்லாதநிலை வேண்டுமானால் இன்பத்தையும் நாம் நீக்க வேண்டும் என்பதாம். ஆனால் வேதாந்தக் கொள்கைகள் துன்பம் சிறிதும் இல்லாத நிலை எனக் கொள்வதோடு, பூர்ண அனுபவத்தை அனுபவிக்கும் நிலை எனவும் கூறுகின்றன. அந்த இன்ப அனுபவநிலை என்ன என்பதில், பல கொள்கைகள் மிகவும் வேறுபடுகின்றன. எல்லா மங்கலமான குணங்களுக்கும் இருப்பிடமான கடவுளைக் காணலோ, கடவுளோடு கலத்தலோ எனச் சிலர் கொள்கின்றனர். வேறு சிலர் இன்பமே வடிவான முழுமையான பரப்பிரம்மத்துடன் ஒன்றுபட்டு இருப்பதே முத்தி எனக் கொள்கின்றனர். ஆனால் எல்லா வேதாந்தக் கொள்கைளிலும் விடுதலை வடி

வாயுள்ள இன்பத்தினால் குறிக்கப்படுவது, துன்பத்துக்கு எதிராயுள்ள மகிழ்ச்சி அல்லாமல், முழுமையும் அமைதியும், இன்ப துன்பங்களைக் கடந்த அனுபவமுமேயாம். புத்தருடைய அறிவுரைகளில் விடுதலைப் பற்றிப் பெரும்பாலும் உபயோகிக்கும் நிர்வாணம்என்னும் சொல்லுக்கு 'அவிதல்' 'குளிர்ச்சியாதல்' என்பது நேர் பொருள். புத்தர் நிர்வாணம் என்ற சொல்லால் ஒன்றுமேயில்லாது போகின்ற எதிர்மறை நிலையைக் குறித்தாரா, அன்றேல் இன்பத்தை அனுபவிக்கும் உடன்பாட்டு நிலையைக் குறித்தாரா என்பது பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. நிர்வாணம் என்பது நிலையான பிறப்பிறப்பற்ற தூக்கம் மட்டும்தானா, அன்றேல் பிறப்பிறப்பற்ற நிலையான வாழ்வா என்னும் கேள்வி எழுகிறது. பௌத்தத்தின் தொன்மையான கொள்கைகளும் அவற்றை ஆராய்ச்சி செய்பவர்களும் நிர்வாணம் எனும் சொல்லால் ''உண்மையில் ஒன்றும் இல்லை'' என்ற நிலையையே குறித்தார் எனக் கருதுகின்றனர். மேலும் குறிப்பாகப் பௌத்த மதத்தை விளக்கிப் பொருள்கூறும் வேதாந்திகள் நிர்வாணத்துக்குப் பொருளாக ''உண்மையில் ஒன்றும் இல்லாததைப் போன்ற'' என்றோ ''ஒன்றுமில்லை எனும் வகையில்'' என்றோ கருதுகிறார்கள். டாக்டர் இராதாகிருஷ்ணன் ''நிர்வாணம் எல்லாமே அழிந்து போதலைக் குறிக்கவில்லை. ஆனால் எரிமலை போன்ற உணர்வுகளும், தூய்மை பெற்றபின் முழுமையுடன் சேர்ந்து அனுபவிக்கும் இன்பமும் அழிந்து போதலையே குறிக்கிறது'' என்கின்றார்.

பல்வேறு இந்தியத் தத்துவக்கொள்கைகள் மோட்சம் என்பது என்ன என்பதில் தம்முள் வேறுபாடு கொண்டாலும், அவையெல்லாம் சம்சாரம் எனப்படும் பிறப்பு இறப்புச் சக்கரமாகிய சுழலிலிருந்து விடுபடுவதே முத்தி என்பதை ஒப்புக் கொள்கின்றன. வேகமாக ஓடும் நீரில் அகப்பட்ட புழுவானது ஒரு நீர்ச்சுழியிலிருந்து மற்றொன்றுக்கு விரைவில் தள்ளப்படுவதுபோல, ஜீவர்களும் ஒரு பிறப்பிலிருந்து மற்றொரு பிறப்புக்கு அலைக்கழிக்கப்பட்டு, பிறப்பிறப்பு என்னும் சக்கரத்தில் பிடிபட்டு உழல்கிறார்கள். மோட்சம் விடுதலை என்பது மீண்டும் பிறப்புக்குச் செல்லாத, முடிவாக இந்தச் சக்கரத்திலிருந்து விடுபடுதலையே குறிக்கும். இதையே வேறு விதமாகக் கூறினால் மோட்சம் என்பது மேலும் இறப்பு இல்லாத நிலையைக் குறிக்கும்.

அத்வைதக் கொள்கையின்படி பிரம்மம் என்பது மேலான ஆனந்தம். மோட்சம், அதாவது பிரமத்தை அடைதல் நிரதிசய ஆனந்தமாக உள்ளது. மோட்சத்தில்முடிவில்லாத பரப்பிரம்மத்தில் நிலையாக ஒருவர் நிறுவப்படுகின்றனர். அந்தப் பரப்பிரம்மமானது முடிவில்லாத இன்ப வடிவினது. இந்தப் பிரம்ம உண்மை எல்லா உண்மைகளையும் விடப் பேருண்மையாய், துன்பக் கலப்பில்லாத இன்ப வடிவாய் உள்ளது. வேதாந்த நூல்களின் மூலமாகப் பிரமத்தை ஆன்மாவாக உணரும் போது, ஒருவர் பிரம்மத்தை மட்டுமே அடைகிறார்.

மோட்சம் என்பது துன்ப நீக்கம் மட்டுமே என்பதைக் கடைப்பிடிக்கும் சில கொள்கைகள் துன்ப நீக்கத்தைத் தவிர, இன்ப அனுபவம் என்பது இல்லை என வாதிக்கின்றன. இன்பமும் துன்பமும் வெவ்வேறாக உணரப்படுதலால், அவர்களுடைய கொள்கை அனுபவத்துக்கு முரண்படுகிறது. துன்பத்தின் நீக்கமே இன்பமானால் இன்பம் என்பது துன்பத்தின் நீக்கமே என நாம் கொள்ளலாம். எல்லா மனிதர்களிடத்திலும் துன்ப நீக்கம் மட்டுமின்றி, நேரான இன்பப் பேறும் இருத்தல் முழு மொத்தமாக உணர்ந்த உண்மையாகும். ஆனந்தம் மேலும் மேலும் வேண்டும் என்ற தேட்டமும் காணப்படுகிறது. மிருகங்களும்கூட ஆனந்தத்தையே விரும்புகின்றன. ஆனந்தத்தை அவைகளுக்கு அளிக்கும் வழிகளை வேறுபடுத்திப் பார்க்கும் திறம் மிருகங்களிடம் இல்லை. மனிதன் மட்டும் விரும்பினால், நூல்களிடமிருந்தும் முனிவர்களிடமிருந்தும் ஆனந்தத்தை அடைவதற்கான வழிகளை அறிந்து, அவைகளை வாழ்க்கையில் கடைப்பிடிக்கும் திறமையாகிய நலனைப் பெற்றிருக்கின்றான். முனிவர்களும் நூல்களும் ஆன்மாவானது மிகவும் மேலானதெனவும், ஆனந்தம் இறுதியான முடிவு, மோட்சம் எனவும் கூறுவதைக் காண்கிறோம்.

மோட்சமானது நிலையான என்றுமுள்ள ஆன்மாவின் தன்மையாய் இருப்பதால், இறப்பானது பூத தேகத்தைக் கொள்ளும் வரைக்கும் இவ்வுண்மையை உணர ஒருவர் காத்திருக்க வேண்டிய அவசியமில்லை. இந்த உடம்பில் குடியிருந்து கொண்டே ஞானத்தைப் பெறும்போது ஒருவர் மோட்சம் அடைகிறார். இத்தகையவர் ஜீவன் முத்தர், உடலில் குடியிருக்கும்போதே மோட்சத்தைப் பெற்றவர்- இது அத்வைத தத்துவத்தின் உயர்ந்த நுண்ணறிவு ஆகும்.

# புதையுண்ட தலைநகரும், புகழ் விளங்கும் திருக்கோயிலும்

திரு. டாக்டர். இரா. கலைக்கோவன், திருச்சி

கொடிகட்டிப் பறந்த எத்தனையோ பேரரசுகளின் தலைநகரங்கள் மண்மூடிப் போயிருக்கின்றன. எழுச்சியோடு விளங்கிய எத்தனையோ நாகரிகங்கள் இருக்குமிடம் தெரியாது விழுந்துவிட்டன. புதைபொருள் ஆய்வுகளின் மூலம் இந்த மகத்தான வரலாறுகள் நம்முன்னோரின் மங்காத புகழை வெளிக்காட்டி வருகின்றன. மொகஞ்சதாரோ, அரப்பா காலத்திலிருந்து அண்மையில் அகழ்வாய்வு செய்யப்பட்ட கங்கைகொண்டசோழபுரம்வரை, தோண்டிய இடமெல்லாம் நாகரிகச் சுவடுகள்! கட்டடக்கலை வல்லுநர்களாய் விளங்கிய தமிழ்ச் சமுதாயத்தின் அறிவுத் திறனும் அறிவியல் நோக்கும், வெளிப்படும் வகையில் வியக்கத்தக்க கண்டுபிடிப்புகள்! இவ்வரிசையில் திருச்சிக்கு அண்மையிலுள்ள சமயபுரத்தில் நடைபெற்றுவரும் அகழ்வாய்வுப் பணியும் சில புதிய சான்றுகளைச் சேர்த்துள்ளது.

திருச்சி-சென்னை நெடுஞ்சாலையில், சமயபுரம் அருள்மிகு மாரியம்மன் திருக்கோயிலுக்குத் திரும்பும் சாலைத் திருப்பத்துக்கு அரை கிலோ மீட்டர் தொலைவில் புள்ளம்பாடி வாய்க்கால் ஓடுகிறது. இந்த வாய்க்காலுக்கு அருகில் பல இடங்கள் மேடுதட்டிப் போயிருக்கின்றன. இம்மேடுகள் புதைபொருள் ஆய்வாளர்களின் கவனத்தை ஈர்த்திருக்கின்றன. இங்குத் தோண்டும் இடங்களில் எல்லாம் செங்கற்கள் கிடைப்பதாகப் பொதுமக்கள் சொல்கிறார்கள். ஏற்கனவே இங்குப் புதையுண்ட நகரொன்றின் சுவடுகள் இருப்பதாகச் சதாசிவப்பண்டாரத்தார் போன்ற வரலாற்றுப் பேரறிஞர்கள் தங்கள் நூல்களில் குறித்துப் போயிருக்கிறார்கள்.

இம்மேடுகளை அகழ்ந்து இங்குள்ள நாகரிகச் சிதைவுகளைக்காணத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரும் நாட்டுநலப்பணித் திட்டப் பிரிவினைச் சேர்ந்த கல்லூரி மாணவர்களும், பொதுமக்களின் ஒத்துழைப்புடன் அகழ்வாய்வுப் பணியில் ஈடுபட்டனர். திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவரின் நிறைந்த ஆர்வம் இப்பணிக்கு உறுதுணையாய் அமைந்தது.

நிலமட்டத்திற்குப் பதினைந்தடி கீழே ஓடும் புள்ளம்பாடி வாய்க்காலில், இப்போதுள்ள நீர்மட்டத்திற்கு நான்கடி கீழே, தெற்கு வடக்காகப் பன்னிரண்டடி நீளத்திற்குக் கால்வாய் ஒன்று செல்வதைத் தொல்பொருள் ஆய்வுத்துறையினர் கண்டுபிடித்தனர். இதன் மீது கற்களிட்டு மூடப்பட்டிருப்பதாக நீரில் இறங்கிப் பார்த்தவர்கள் கூறினார்கள். இக்கால்வாய் ஒரு ஆழ்கிணற்றில் முடிந்ததை ஆய்வாளர்கள் அகழ்ந்தறிந்தனர்.

இக்கால்வாய் வெட்டப்பட்டிருக்கும் வாட்டத்தைப் பார்த்தால், இதுகொள்ளிடத்திலிருந்து, இங்கு ஒரு காலத்தில் எழுச்சி பெற்று விளங்கிய கண்ணனூர் எனப்படும் விக்கிரமபுரத்திற்கு, நீர்கொண்டு வரப் பயன்பட்டிருக்குமா என்று கருதத்தோன்றுகிறது. இது பாதுகாக்கப்பட்ட குடிநீர்த் திட்டத்தின் ஓரங்கமாய் இருக்கலாமென்று தொல்பொருள் துறையினர் கருதுகின்றனர்.

இக்கால்வாயின் அருகில் அகழ்ந்தெடுக்கப்பட்ட இடங்களில் செங்கற் சுவர்கள்காணப்படுகின்றன. ஒன்றன்மேல் ஒன்றாக வரிசையுற அழகாய் அடுக்கிக் களிமண் பூச்சுப் பெற்ற நிலையில் உள்ள சுவர் வரிசைகளைப் படத்தில் பார்க்கலாம். இச்சுவர்கள் கோட்டையொன்றின் எச்சங்களாக இருக்கலாம்.

இப்பகுதியில் ஓரிடத்தில் தாங்குதள அமைப்புடன், செங்கற்கள் பாவப்பட்ட அடிப்பகுதி ஒன்று காணப்படுகின்றது. இது பெரும் கட்டடமொன்றின் அடித்தளமாக இருந்திருக்கக்கூடும். மாளிகைகள் நிரம்பிய கோட்டையொன்றின் அழிவுச் சின்னங்களாய் அவை காட்சியளிக்கின்றன. நெடுஞ்சாலையின்

கிழக்குப்புறத்திலும், புள்ளம்பாடி வாய்க்கால் கரைகளின் செங்கற் சுவர்கள் காணப்படுகின் றன. இங்கும் அகழ்வாராய்ச்சி முனைப்பாகி யுள்ளது. மாபெரும் தலைநகரமாய் விளங் கிய கண்ணனூரே, இன்று பூமிக்கடியில்புதைந்த நிலையில், சிதைந்து, உருக்குலைந்து காணப் படுகிறது என்று வரலாற்று ஆய்வாளர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார்கள்.

ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகட்கு முற்பட்டதும், பல போர்களைச் சந்தித்துள் ளதுமான இத்தலைநகர் தோன்றிய வரலாறு சுவையானது. பல்லவர்களை அழித்துச் சோழர் தொல்குடியின் பேராட்சிக்கு வித்திட்ட விசயா லய சோழனின் வழியினர் தமிழகத்தை ஏறத் தாழ நானூறு ஆண்டுகளுக்கும் மேலாக ஆண்டனர். அச்சோழப் பெருவழியின்கடைசித் தோன்றல்கள்தான் மூன்றாம் இராசராசனும் அவன் மகன் மூன்றாம் இராசேந்திரனும்.

மூன்றாம் இராசராசனின் காலத்தில்தான் சோழப் பேரரசு சரியத் தொடங்கியது. பாண் டிய நாட்டைப் பேரரசாக்கும் பணியில்தன்னை முழுவதுமாய் ஈடுபடுத்திக் கொண்ட முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி. 1219-இல் சோழ நாட்டின்மீது படையெடுத்து மூன் றாம் இராசராசனை முறியடித்தான். பிறகு, தோற்றோடிய இராசராசனை மீண்டும் வர வழைத்து அவனைத் தனக்குத் திறை செலுத் தும் சிற்றரசனாக்கினான்.

கர்நாடகத்தைச் சேர்ந்த துவார சமுத் திரத்திலிருந்து அரசாண்டு கொண்டிருந்த ஒய் சளர் அல்லது போசளர் என்ற மரபினைச் சார்ந்த மன்னர்களின் தொடர்பு மூன்றாம் இராசராசனுக்கு ஏற்பட்டது. அவன் ஆட்சி யில் ஏற்பட்ட உள்நாட்டுக் குழப்பங்களைத் தீர்க்கவும், கலகங்களை அடக்கவும் இப்போசள மன்னர்களான இரண்டாம் வல்லாள தேவனும் இரண்டாம் வீரநரசிம்மனும் உதவினர். இம் மன்னர்களின் துணைதந்த துணிவில் மூன்றாம் இராசராசன் பாண்டியனுக்குத் திறைகட்ட மறுத்தான். கி.பி. 1231இல் மாறவர்மனுடன் இரண்டாம் முறையாகப் போர் நடந்தது. மீண்டும் இராசராசன் தோற்றோடினான்.

இராசராசன் வலியிழந்தது கண்டதும், அவன்கீழ் ஒரு காலத்தில் சிற்றரசனாக இருந்த கோப்பெருஞ்சிங்கன், அம்மன்னனை வந்தவாசி அருகே தெள்ளாறு என்னும் இடத்தில் நடந்த போரில் வென்று, தன் தலைநகரமான சேந்த மங்கலத்தில் சிறை வைத்தான். இதைக் கேள்வி யுற்ற போசள மன்னனான வீரநரசிம்மன் துவாரசமுத்திரத்திலிருந்து படையுடன் வந்து காவிரியின் வடகரையில், திருவரங்கத்திற்கு அண்மையில் தங்கித் தன் தண்ட நாயகர்களின் துணையுடன் கோப்பெருஞ்சிங்கனை வென்று, இராசராசனைச் சிறை மீட்டான். திருவயிந் திரபுரக் கல்வெட்டொன்று இச்செய்திகளை மிகத் தெளிவாக விளக்குகிறது.

இந்நிகழ்ச்சியால் முதன் முறையாகப்பதின் மூன்றாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் போசளர்களின் ஆதிக்கம் சோழநாட்டில்வலுப் பெற்றது. இம்மன்னர்களின் கல்வெட்டுகள் திருமழபாடி, திருவரங்கம், திருநல்லூர், திருவானைக்கா, திருவெள்ளறை, புதுக்கோட் டையைச் சேர்ந்த திருக்கோகர்ணம் போன்ற பகுதிகளில் காணப்படுகின்றன.

இராசராசனின் மகன் மூன்றாம் இரா சேந்திரன் காலத்தில் சோழர்களுக்கும் போச ளர்களுக்கும் இருந்து வந்த நல்லுறவு சீர் குலைந்தது. வீரநரசிம்மனின் மகன் வீர சோமேசுவரன் பாண்டியருடன் சேர்ந்து கொண்டு இராசேந்திரனுக்குத் துன்பம் தந் தான். பல இடங்களில் இராசேந்திரனுக்கும் வீரசோமேசுவரனுக்கும் போர்கள் நிகழ்ந் துள்ளமைக்குச் சான்றுகள் உள்ளன.

இதற்கிடையில், பாண்டிய நாட்டில் ஒளி விளக்கென முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் தோன்றினான். அவன் வீரமும் பேராற்றலும் கண்டு அச்சமுற்ற வீரசோமேசு வரன், முன்பு தான் பகைமை கொண்டிருந்த இராசேந்திரனுடன் நட்பு கொள்ளத்தொடங்கி னான். திருச்சியைச் சேர்ந்த மகாதானபுரம், திருவானைக்கா முதலிய இடங்களில் உள்ள கல்வெட்டுகள் அவர்களது நட்பைப் பற்றிக் கூறுகின்றன. வீரசோமேசுவரனும் அவனது மகனான வீரராமநாதனும் பெரும் வீரர்களா வர். இவர்கள் ஆட்சிக்கு உட்பட்டிருந்த நிலப் பரப்பில் தற்போதைய அன்பில், கண்டராதித் தம், நத்தமாங்குடி போன்ற இடங்கள் அடங்கி யிருந்தன. வீரசோமேசுவரனே திருவரங்கத் துக்கு வடக்கே உள்ள கண்ணனூரை (தற் போதைய சமயபுரம்) தலைநகரமாகக் கொண்டு ஆண்டு வந்தான். கி.பி. 1255இல் இருந்து இப்பகுதி இவனது ஆளுகையில் இருந்து வந்தது. இம்மன்னனால் கட்டப்பட்ட போச ளீச்சரம் என்னும் கோயில் அழிந்த நிலையில் இன்றும் இங்கு இருந்து இவன் புகழை மௌன மாய்ப் பரப்பிக் கொண்டிருக்கிறது.

இப்போது அகழ்ந்தெடுக்கப்பட்டுவரும் கட்டடச் சிதைவுகள் ஒரு காலத்தில் இவ்வீர சோமேசுவரனின் மாடமாளிகைகளாகவும், கோட்டை கொத்தளங்களாகவும் இருந்த மையை வரலாறு நமக்கு நன்கு உணர்த்து கிறது. இக்கண்ணனூர் பெருஞ்சிறப்புடன் விளங்கிய போசளத் தலைநகரமாகும். கர் நாடகத்தைச் சேர்ந்த போசளர்களுக்குத் தமி

முகத்தில் தலைநகரமாய் விளங்கியபெருமையை உடைய இக்கண்ணனூரை கி. பி. 1264இல் சடையவர்மன் சுந்தரபாண்டியன் கைப்பற்றினான். அப்போரில் வீரசோமேசு வரன் கொல்லப்பட்டான். வீரராமநாதன் தோற்றோடினான். வீரராமநாதனின் மக னான வீரவல்லாளன்தான் போசள வழியில் வந்த கடைசி மன்னன். இம்மன்னன் மதுரையை ஆண்ட இயாசுத்தின் துக்ளக் குடன் நடந்த போரில் வஞ்சிக்கப் பெற்றுச் சிறைப்பிடித்துச் செல்லப்பட்டான். அங்கு அவனை உயிரோடு தோலை உரித்து, அத் தோலில் வைக்கோலை அடைத்து, மதுரைக் கோட்டை வாசலில் மதிற் சுவர்மீது தொங்க விட்டார்கள். இதை அரபுநாட்டுப் பயணியான இபின்பதுதா தன் பயணக் குறிப்பில் கூறி யிருக்கிறார்.

ஒரு வீரவரலாற்றின் நிலைக்களனும், பெருமை மிக்க பல போர்களின் நிகழிடமு மான இக்கண்ணனூருக்கு அருகில்தான் வீர சோமேசுவரன் கட்டிய போசளீச்சரம் என்னும் அழகிய கோயில் அழிந்த நிலையில் காணப்படு கிறது. சுற்றுச் சுவர்கள் சிதைந்து, வெளித் திருச்சுற்று மாளிகை முழுவதுமாய்ச் சிதில மாகி, வாயிற்கோபுரம் இடிந்து நிற்கும் இத் திருக்கோயில் மாடக்கோயில்கள் போன்று உயர்த்திக் கட்டப்பட்டிருந்தாலும் மாடக் கோயில் வகையைச் சார்ந்தது அல்ல. சுற் றாலைக் கோயில்கள் எதுவும் காணப்படாத நிலையில், அகண்ட பெருவெளியில் இம்மையக் கோயில் தனித்து நிற்கும் ஏகாந்தப் பேரழகு ஒரு கவிதையாய்த் தெரிகிறது.

சிறு பலிபீடமும் அதையடுத்து சிறு நந்தி மண்டபமும் உள்ளன. இந்நந்தி மண்ட பம் கோயிலின் முன்மண்டபத்துடன் ஒரு மைய இணைப்பு மூலம் இணைக்கப்பட்டுள் ளது. முன்மண்டபத்தின் தென்புறமும் வட புறமும் படிகள் அமைந்துள்ளன. மகாமண்ட பத்தின் வடபுறம் தெற்கு நோக்கிய நிலையில் இறைவியின் திருமுன் அமைந்துள்ளன. நாற் கர நாயகியாய் எழுந்தருளியிருக்கும் இறைவி யின் இரண்டு பின்கரங்களும் மலர் மொட்டுக் களை ஏந்தியுள்ளன. வலதுமுன்கரம் காக்கும் கரமாய், உள்ளது. இடது பின்கரம் அருள்கர மாய்க் காட்டப்பட்டுள்ளது. ஆனந்தவல்லி என்ற திருப்பெயருடன் விளங்கும் இத்தேவி யின் விமானம் ஒரு தள அமைப்பும் வட்டமான சிகரமும் கொண்டதாகும்.

இம்மகா மண்டபத்தில் பைரவர், கதிர வன், சண்டேசுவரர் முதலிய சிற்பங்களும், ஒன்பான் கோள்களும் அமைந்துள்ளன. உள் மண்டபத்துக்கு முன்னால் இம்மகாமண்டபம் அளவில் சற்றுச் சிறுத்து அமைந்துள்ளது. வலப் புறம் பிள்ளையாரும் இடப்புறம் முருகனும் உள்ளனர். உள்மண்டபத்து வாயிலை வாயிற் காப்போர் காவல் செய்கின்றனர். இடை நடையை (அந்தராளம்) அடுத்த கருவறையில் இறைவன் போசளீசுவரமுடைய நாயனார் என்னும் திருப்பெயருடன் எழுந்தருளியுள்ளார். பதினாறு பட்டை லிங்கம் வட்டமான ஆவுடையார்மீது கம்பீரமாகக் காட்சி தரு கிறது.

இக்கோயிலின் கருவறைப் புறச்சுவர் களில் உள்ள தேவகோட்டங்களில் தெற்கில் தென்திசைக் கடவுளும் மேற்கில் லிங்கோத்ப வரும் உள்ளனர். வடபுறக் கோட்டம்வெறுமை யாக உள்ளது. அழகிய கும்பப் பஞ்சரங்கள் புறச்சுவர்களின் எழிலுக்கு எழில் சேர்க்கின் றன. இக்கோயிலின் துணைத்தளமும் தாங்கு தளமும் பல அடுக்குகளாய் உயர்த்திக் கட்டப் பட்டிருப்பதால், இக்கோயில் மாடக்கோயில் போன்று காட்சியளிக்கிறது. இக்கோயிலின் விமானம் பழையாறைச் சோமநாதர்கோயிலை மிகவும் ஒத்துள்ளது. வட்டமான சிகரத்தைக் கொண்ட மூன்று நிலை விமானம் இது.

இக்கோயிலின் மகாமண்டபத்துத் தென் புறச் சுவரிலும் கருவறைத் தென்புறச் சுவரி லும், இடிந்த கோபுர நிலையின் உட்புறச் சுவரிலும் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கருவறையின் தென்புறச் சுவரில் காணப்படும் கல்வெட்டு காஞ்சிபுரத்து வணிகர் சிலர் இக் கோயிலின் தாங்குதளத்திலுள்ள குமுதப்படை வரிசையை வெட்டுவிக்கப் பணிக்கொடை அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.

திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டானின் மூன்றாம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டொன்று இங்குக் காணப்படுகிறது. இது இக்கோயிலில் 'இரணமுகராமன் சந்தி' என்னும் பெயரில் ஒரு திருவிழா கொண்டாட நிலக்கொடை அளிக்கப்பட்ட செய்தியைக் கூறு கிறது. இக்கோனேரின்மை கொண்டான் வீர ராமநாதனே என்று வரலாற்றறிஞர்கள் கருது கின்றனர். கோபுரத்து நிலையில் உட்புறச் சுவரிலுள்ள கிருஷ்ணதேவராயரது கல்வெட்டு, அம்மன்னர் பத்தாயிரம் தங்கக்கட்டிகள் பெறு மானமுள்ள சோடுவரி, சூலவரி, பிறவரி, அரசப் பேறு முதலிய வரிகளைத் தள்ளுபடி செய்து குடிகளை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்திய செய்தியைக் குறிக்கிறது.

இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் காலத்தால் பழமையானது வீரராமநாத னுடையது. இதைக்கொண்டு இக்கோயிலைக் கட்டியது வீரராமநாதனே என்று முடிவு கொள்வது தவறாகும். திருவானைக்காவிலுள்ள சம்புகேசுவரர் கோயிலில் உள்ள வீரசோமேசு வரனின் இரண்டாம் ஆட்சியாண்டுக் கல் வெட்டு, இக்கோயிலில் அம்மன்னனே

போசளீசுவரரை நிறுவியதாகக் கூறுவதால், இக் கோயில் வீரசோமேசுவரனால் கட்டப்பட்டது எனக் கொள்வதே பொருந்தும்.

அழகிய விமானமும், சிறந்த வேலைப் பாடுகளும் அற்புதமான கட்டட அமைப்பும் கொண்ட இத்திருக்கோயில் போசளப் பெரு வேந்தர்களால், சோழநாட்டில், அவர்களால் உருவாக்கப்பட்ட கண்ணனூர் என்னும் தலை நகரத்தில், சோழர் கலைமுறையை முழுவது மாய்ப் பின்பற்றி எடுக்கப்பட்டதாகும்.

எழுநூறு ஆண்டுகளுக்கு முன் சிறப்புமிக்க கோயிலைக் கொண்ட எழுச்சிமிக்க தலைநக ராய்ச் செம்மாந்து விளங்கிய இக்கண்ணனூர், இன்று தன் வரலாற்றின் எச்சங்களைச் சுமந்து கொண்டு, பழைய புகழொளியில் புதிய செய்தி களைத் தந்து கொண்டுள்ளது. அகழ்வாய்வுகள் மேலும் விரிவாக்கப்பட்டு முனைப்பானால், இன்னும் பல புதிய செய்திகள் வெளிவரக்கூடும் என்று ஆராய்ச்சி அறிஞர்களும், கலை வர லாற்று ஆய்வாளர்களும் ஆவலுடன் எதிர் நோக்கியுள்ளனர்.

---

## நிம்பார்க்கர் (கி.பி. 11-ஆம் நூற்றாண்டு)

இவர் ஆந்திர நாட்டில், தைலங் பிராம்மண குலத்திற் பிறந்தவர். இராமா நுசருக்குப் பின்னர், கி.பி.பதினொன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப் பெறுகின்றார். பிரம்மம் சித்து அசித்து என்னும் முப்பொருள்களும் இவருக்கு உடன்பாடு. பிரமத்தை, இவர் கிருஷ்ணன் அல்லது அரி என்னும் சிறப்புச் சொற் களால் வழங்குகின்றார். பிரம்மம் உலகத்திற்கு உபாதான காரணமாகவும், நிமித்த காரணமாகவும் விளங்குகின்றது என்பது, இவருடைய கொள்கை. ஏனைய வைணவ வேதாந்திகளைப் போன்று, இவரும் பிரம்மமே உலகமாகப் பரிணமிக் கின்றது என்கின்றார். கடவுள் தமக்கு ஒரு லீலையாகவே உலகத்தைப் படைக் கின்றார்; ஆனந்தமயனாகிய கடவுளிடம் இருந்தே, தமது நல்வினை தீவினை களுக்கு ஏற்ப, உயிர்கள் இன்ப துன்பங்களை அடைகின்றன. பற்றற்ற செயல்களி னால், உயிர்கள் துன்பங்களினின்று விடுபடுகின்றன. பிரம்மம் என்பது நிர்க்குணப் பொருள் அன்று; பேரறிவு பேராற்றல் பேரழகு பேரருள் பேரின்பம் முதலிய பல சிறந்த குணநலங்களை யுடையது.

பிரம்மம் ஆகிய பொருளை நாம் நமது கட்புலனாலும் கருதலளவையாலும் அறிதல் இயலாது. இறைவனும் ஞானிகளும் அருளிச் செய்துள்ள நூல்களாகிய வேத ஆகமப் பிரமாணம் கொண்டே, பிரம்மப் பொருளை அறிதல் கூடும். உயிர் கள் எண்ணற்றன; அணு பரிமாணம் உடையன. முத்தி நிலையிலும் உயிர்கள்தனித் தன்மையுடையனவாய், இறைவனோடு ஒன்றாகாமல், வேறுபட்டு நிற்கும். இறை வனை அடைவதற்குக் கருமம் - ஞானம்-பத்தி-பிரபத்தி-குருஉபசத்தி என்னும் ஐந்து சாதனங்கள், மிகவும் இன்றியமையாதவை. உலகத்துப் பொருள்கள் பிரா கிருதம், அப்பிராகிருதம், காலம் என மூன்று வகைப்படும்.

சங்கரரின் கேவலாத்துவைத வாதம், சைதன்யரின் அசிந்திய பேதவாதம் என்பவற்றின்வேறாக, நிம்பார்க்காரின் கொள்கைக்குப் பேதாபேதவாதம் என்னும் பெயர் வழங்கப்பெறுகின்றது. பிரமத்தோடு உலகமும் உயிரும், காரணமும் காரிய மும் போல ஒருவகையில் வேறுபட்டும், ஒருவகையில் வேறுபடாமலும் விளங்கு கின்றன என்பது, நிம்பார்க்கரின் பேதாபேதவாதத்தின் முடிவு. இதனைச் 'சுவ பாவிகபேதம்' என்றும் கூறுவர். இவரது 'சக்திவாதம்' சமயத்துறையிற் பல சிக்கல் களை விடுவிக்கின்றது. இறைவன்பால் அவனது ஐசுவரியப் பிரதானம் பற்றிப் பக்தி செலுத்துதலைவிட, மாதுர்யப் பிரதானம் பற்றிப் பக்தி செலுத்துதலையே, நிம்பார்க்கர் பெரிதும் வற்புறுத்துகின்றார். இல்லற நெறி நின்றும் இறைவனை அடையலாம் என்பது இவர் கொள்கை.

பிரம்மசூத்திரத்திற்கு இவர் வகுத்த பேருரை நூல் ஆகிய வேதாந்த பாரி சாத சௌரபம், தச சுலோகி, மந்திர ரகசிய சோடசி, பிரபந்த கல்பவல்லி, கிருஷ்ணாஷ்டகம், இராதாஷ்டகம், இராதா ஸ்மரண ஸ்தோத்திரம் முதலியன நிம்பார்க்கர் இயற்றிய நூல்கள். ஸ்ரீநிவாசர் என்பவர், இவரது சீடர்களுள் முதன் மையானவர். பிரம்ம சூத்திரத்திற்கு அவர் வேதாந்த கௌஸ்துபம் என்னும் உரை நூலை இயற்றியுள்ளார்.

—ஆசிரியர்



# அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

## திருச்செந்தூர்—628 215

ஆறு படைவீடுகளில் இரண்டாவது படைவீடாகிய திருச்செந்தூர், மன்னார் வளைகுடாக் கடலின் கரையோரத்தில் கிழக்கு மற்றும் வடக்குக் கிரிப்பிராகாரங்களில், கடல் அலைகள் வந்துமோதும் இயற்கை எழில் மிகுந்த ஒரு பழம்பதியாகும். செந்தமிழ்க் கடவுளாம் கந்தவேள் சூரபத்மனை வென்றுவாகை சூடிச் சிவபெருமானை வழிபட்டு அமர்ந்தருளும் பதி இது. சூரபத்மனை வதம்செய்து முருகப்பெருமான் வெற்றிவாகை சூடிய கந்தசஷ்டித் திருவிழா ஐப்பசி (அக்டோபர்-நவம்பர்) மாதத்தில் திருக்கோயிலில் விமரிசையாக நடைபெற்று வருகிறது.

அகநானூறு, புறநானூறு, திருமுருகாற்றுப்படை, திருப்புகழ் போன்ற நூல்களில் இடம் பெற்ற இத்திருக்கோயிலில் கர்னாடக மாநிலத்தைச் சேர்ந்த போற்றிகளால் பூசைகள் செய்யப்படுவதும், 9 கால பூசைகள் தினசரி நடைபெறுவதும் சிறப்பு அம்சமாகும்.

கோவில் திறந்திருக்கும் நேரம்:

தினசரி காலை 5 மணிக்கு நடை திறந்து பகல் 12.30 மணிக்கு நடை சாத்தப்படுகிறது. பின்னர் மாலை 4 மணிக்கு நடை திறந்து இரவு 10 மணிக்கு நடை சாத்தப்படுகிறது.

பூசை நேரங்கள்:

விசுவரூப தரிசனம் காலை 5.30மணி. உதய மார்த்தாண்ட அபிஷேகம் காலை 6 மணி. உச்சிக்கால அபிஷேகம் காலை 10.30 மணி. உச்சிக்கால தீபாராதனை பகல் 12.30 மணி. சாயரட்சை தீபாராதனை மாலை 5 மணி.

இராக்கால அபிஷேகம் இரவு 8.30 மணி.

இராக்கால தீபாராதனை இரவு 9.15 மணி.

முக்கியத் திருவிழாக்கள்:

1. மாசித் திருவிழா-பிப்ரவரி-மார்ச்
2. வைகாசி விசாகம்-மே-ஜூன்
3. ஆவணித்திருவிழா-ஆகஸ்ட்-செப்டம்பர்
4. கந்தசஷ்டி விழா-அக்டோபர்-நவம்பர்

சிறப்புப் பூஜா கட்டண விவரங்கள்:

1. தங்கத்தேர் இழுப்பதற்குக் கட்டணம் ரூ. 500/- (ரூ. ஐந்நூறு)
2. இத்திருக்கோயில் மூலமாகச் சண்முகார்ச்சனை செய்யக் கட்டணம் ரூ. 600/- (அறுநூறு) ரூபா.
3. மாதாந்திரக் கிருத்திகையன்று ஜெயந்திநாதர் சிறப்பு அபிஷேகம் செய்யக் கட்டணம் ரூ. 1,500/- —தொடர்பு கொள்ள வேண்டிய தொலைபேசி எண். 70

கட்டளைக்குச் செலுத்த வேண்டிய நிரந்தர வைப்புத்தொகை விவரங்கள்:

| | | |
|---|---|---|
| 1. | புஷ்பக் கட்டளை | ரூ. 750/- |
| 2. | உதயமார்த்தாண்ட கட்டளை | ரூ. 1,000/- |
| 3. | பிரதோஷக் கட்டளை | ரூ. 1,000/- |
| 4. | அஷ்டோத்தர அர்ச்சனைக் கட்டளை | ரூ. 1,000/- |
| 5. | சண்முகார்ச்சனைக் கட்டளை | ரூ. 7,500/- |
| 6. | ஒருநாள் முழுவதும் ஒன்பதுகால பூசைக்கட்டளை | ரூ. 10,00/- |
| 7. | தங்கரதம் கட்டளை | ரூ. 10.000/- |
| 8. | ஜெயந்திநாதர் சிறப்பு அபிஷேகக் கட்டளை | ரூ. 15,000/- |

பி.கு—வருடத்தில் ஒரு தினத்தில் மட்டும் பக்தர்கள் விரும்புகிறவாறு மேற்கண்ட கட்டளைகள் செய்யப்படும்.

மாதந்தோறும் அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்ப வருடம் 1க்குக் கட்டணம் (பதிவு அர்ச்சனை) ரூ. 40/-

(தபால் கட்டண உயர்வுக்கு ஏற்பக் கட்டணம் உயர்த்தப்படும்).

குறிப்பிட்ட நாம, நட்சத்திரத்தில் அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்பக் குறைந்த பட்சக் கட்டணம் ரூ. 5/-

திருக்கோவில் பிரசாதம் தபாலில் பெறக் குறைந்த பட்சக் காணிக்கை ரூ.2/-

தங்குமிட வசதி விவரங்கள்:

குளிரூட்டப்பட்ட மற்றும் இதர நவீன வசதிகளுடன் கூடிய பல்வேறு ரகங்களிலான அறைகள் மற்றும் சிறு குடில்கள் நியாயமான வாடகைக்குக் கிடைக்கும்.

தொடர்பு கொள்ள வேண்டிய தொலைபேசி எண்.71.

தொலைபேசி எண்கள்: அலுவலகம் 21, கோவில் (உள்துறை) 70

| | |
|---|---|
| த. நாகராசன், B.Sc., | எஸ்.ஆர். சுப்ரமணிய ஆதித்தன், |
| உதவி ஆணையர்/செயல் அலுவலர் | தக்கார் |

# திருக்கோயில்களில் இசைத் தூண்கள்

"கலைமாமணி"
கவிஞர் திரு. மனசை ப. கீரன், பி.ஏ.,பி.டி.
வானொலி நிலையம், சென்னை.

**முன்னுரை :**

திருக்கோயில்கள் விந்தை பல கொண்டவை. அவற்றுள் திருக்கோயில்களில் உள்ள இசைத்தூண்கள் கண்ணுக்கும் காதுக்கும் விருந்தளிக்கின்றன. நமது திருக்கோயில்கள் சமுதாய கூடங்களாகவும், இறைவழிபாட்டுத் தலங்களாகவும், கல்வியும் கலையும் வளர்க்கும் கலைமகளின் உறைவிடங்களாகவும், தமிழ்ப் பண்பாட்டு வாழ்வியல்கள் பலவும் சங்கமம்ஆகின்ற கருவூலங்களாகவும் திகழ்கின்றன, என்றால் மிகையில்லை. இயலும் இசையும் கூத்தும் வள்ர்த்துவரும் திருக்கோயில்களில் இசையைப் போற்றி வளர்ப்பதற்குச் சான்றாக -இசையின் ஒரு வடிவாகத் திருவோலக்கப் பொலிவளிப்பன தமிழ்நாட்டுக் கோயில்கள் பலவற்றிலும்காணப் படுகின்ற இசைத் தூண்கள்.

**காலம்:**

இவ்விசைத் தூண்கள் 12-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னவையாகவே கருதப்படுகின்றன. ஏனெனில், பல்லவ மாமன்னர்கள் கட்டிய பெருங்கோயில்களில் இசைத்தூண்கள் காணப்படவில்லை. அவர்களுக்குப் பிற்பட்ட விசயநகர மன்னர்கள் ஆண்ட, சுமார் 16-ஆம் நூற்றாண்டுக் கோவில்களிலேயே அவை விளங்குகின்றன. இவை திண்டுக்கல்லுக்கு அருகிலுள்ள தாடிக்கொம்பு, மதுரை, திருநெல்வேலி, சுசீந்திரம், ஆழ்வார்திருநகரி; திருவனந்தபுரம் முதலிய இடங்களிலுள்ள கோயில்களிலெல்லாம் இருக்கின்றன.

**அமைப்பு:**

மிகப்பெரிய பாறாங் கல்லிலிருந்து பெருந் தூண்களைக் குடைந்து, தூண்களின் அடிப் பாகமும், மேற்பாகமும், குடையப் பெறாமல் இடைப்பாகம் மட்டும் ஜன்னல் கம்பிகளைப் போலக் குடையப்பட்டிருக்கின்றன. இவற்றை மரச் சுத்தியல்களால் தட்டும்பொழுது ஒவ்வொரு கம்பியும் வெவ்வேறு இசை ஒலியை எழுப்புகிறது. அவை ஜலதரங்க இசையை ஒத்துள்ளன.

**மதுரை:**

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் மிகப் புரதானமானது. தேவர்களின் தலைவனாம் தேவேந்திரனே, கோவிலில் சுந்தரேசுவரரை வழிபட்டதாகக் கூறுவார்கள். 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலத்திலேயே மாலை நேரங்களில் சிவன் திருவீதி வலமாக எடுத்து வந்து வழிபடப்பட்டதாக இலக்கியங்கள் இயம்புகின்றன. திருஞானசம்பந்த நாயனார் மதுரைக்கு எழுந்தருளியபோது, கூன்பாண்டியனின் துணைவி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையும் வரவேற்று உபசரித்தனர். மாணிக்கவாசகர் சுந்தரேசுவரரை வழிபட்டு இனிய கவிமலர்களைச் சொரிந்துள்ளார். சொக்கநாதர் அடியார்களுக்கு அருள்பாலிக்க 64 திருவிளையாடல்களைப் புரிந்துள்ளார்.

**கோயிலின் அமைப்பு-வரலாறு:**

மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம், எட்டு வேழங்கள் தாங்குவதுபோல அமைக்கப்பட்டுள்ளது. அஷ்டதிக்கஜங்கள் தம் தோள்களில் விமானத்தைத் தாங்குகின்றன. அண்ட சராசரங்களை எட்டுயானைகள் தாங்குவதாக இலக்கியங்கள் இசைக்கின்றன. அண்ட சராசரமே கோவிலாக அனுமானிக்கப்பட்டு, எட்டு யானைகள் தாங்குவதாகப் படைக்கப் பட்டுள்ளது. இந்த அமைப்பு இந்திரவிமானம் எனப்படும். இந்தக் கோயிலின் அமைப்பை வேறெங்கும் காண இயலாது.

சுந்தரேசுவரர் சந்நிதியிலிருந்து வெளி வந்ததுமே முன்மண்டபத்தில் சிவன் கூத்தாடும் கோலத்திலும், அவனது துணைவி காளி அழகிய வடிவிலும், அக்கினி வீரபத்திரரையும், அகோர வீரபத்திரரையும் காணலாம்.

மதுரை நாயக்கர்களும், அவர்களுக்கும் முற்பட்டு - இப்பகுதியை வென்று ஆண்ட சோழர்களும் இக்கோவிலைப் போற்றிப் பணிந்துள்ளனர். மூன்றாம் குலோத்துங்க சோழன் மதுரையை வென்றதும், சுந்தரேசுவரர் திருக்கோவிலுக்கு எழுந்தருளினான்; சுந்தரேசுவரருக்கு விழா எடுத்து ஆண்டவனைத் திருவீதி வலம் எடுத்தபோது, குலோத்துங்கன் தெருவில் நின்று ஆண்டவனைச் சேவித்தான் என்றால், பண்டைய மன்னர்களின் பக்தியை உணரலாம்.

மதுரை வரலாற்றிலும் கலைவளர்ச்சியிலும், சிறப்பிடம் பெறுகின்ற திருமலை நாயக்கன், மீனாட்சியம்மையின் பெரும் பக்தன். அவன் ஆண்டுதோறும் அம்மைக்கு விழாவெடுத்து, எட்டாம் நாள் திருவிழாஅன்று அம்மனைச் சிறந்த முறையில் அணிகலங்களால் அலங்கரிக்கப்பட்ட சிம்மாசனத்தில் வீற்றிருக்கச் செய்து, அவளின் கையிலிருந்து தனது நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட செங்கோலைப் பெற்று, செங்கோலைப் பட்டத்து யானையின் மேல் வைத்துப் பவனி வரச்செய்து அரண்மனைக்குக் கொணர்ந்து, அரியணையில் இருத்தி, அவன் அணித்திருந்து பணிந்தான்; மீனாட்சி நாடாளத் தான் ஒரு தொண்டனாக இருப்பதாகக் காட்டினான். குமரகுருபரர் இவனொடு திருக்கோவிலுக்குச் சென்று மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழ் பாடியதாகச் சொல்வர். இவனுக்கு அடுத்து வந்த அரசி மங்கம்மாளும் இதே முறையில் செங்கோலைப் போற்றி ஆண்டாள்.

அழகிய மண்டபத்தில் சக்தியர்எண்மரின் சிற்பங்கள் உள்ளன. திருமலை நாயக்கனின் அரசி கட்டிய மண்டபம் அது. முற்காலத்தில் மன்னர்கள் 1008 தூண்களுடன், 1000 கால் மண்டபங்களைக் கட்டியுள்ளனர். மதுரையிலும் அத்தகைய ஒரு மண்டபம் உண்டு. திருமலைநாயக்கன், புதிய பொலிவுடன் கூடிய சிற்பங்கள் திகழும் மண்டபம் ஒன்று கட்டினான். அதனால் அம்மண்டபம் இன்னும் 'புதுமண்டபம்' என்றே வழங்கப்படுகின்றது. அதில் இன்று பல கடைகள் இருக்கின்றன.

மதுரைக் கோவிலில் இசைத் தூண்களைக் காண வட்க்குக் கோபுரத்திற்குப் போக வேண்டும். இதற்கு மொட்டைக் கோபுரம் என்றொரு பெயரும் உண்டு. இக்கோபுர வாயிலின் வலது புறமும், இடதுபுறமுமாக இரு இசைத் தூண்கள் உள்ளன.

**சுசீந்திரம்:**

நாகர்கோவிலிலிருந்து சுமார் 6 கிலோ மீட்டர் தொலைவில், கன்னியாகுமரி போகும் வழியிலுள்ளது சுசீந்திரம். பல குன்றுகளும் பசிய வயல்களும் சூழ்ந்த இப்பகுதி பண்டைக் காலத்தில் 'மலைநாடு' என்றுவழங்கப்பட்டது. நாகர்கோயிலுக்குப் புராதனப் பெயர் கோட்டாறு. சுசீந்திரம் கோவிலுக்குப் பாண்டியர்கள், சோழர்கள், வேணாட்டு மன்னர்கள், நாயக்கர்கள் முதலியோருடன் திருவனந்தபுரத்துக் கேரள வேந்தர்களும் பொன்னும், மணியும், நிலமும், பொருளும் வழங்கிப் போற்றியுள்ளனர்.

சுசீந்திரம் கோயிலில் தாணுமாலயப் பெருமாள் என்று அழைக்கப்படும் சிவபெருமானுக்கும், திருமாலுக்கும் தனித்தனிக் கோவில்கள் உண்டு. இவ்விரண்டும் வடகேதம் தென்கேதம் என்று வழங்கப்படுகின்றன. கயிலாசநாதர் கோவில் மிகப்புராதனமானதாக உள்ளது. இங்கே பல மண்டபங்கள் உள்ளன. 13ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட ரிஷப மண்டபம், உதயமார்த்தாண்ட மண்டபம், செண்பகராமன் மண்டபம், அலங்கார மண்டபம் ஆகியவற்றைக் காணலாம். இவற்றில் அலங்கார மண்டபத்தில்தான் இசைத்தூண்கள் இருக்கின்றன. இக்கோவிலில் 4 இசைத்தூண்கள் உள்ளன. இரு தூண்கள் ஒவ்வொன்றிலும் 33 கற்கம்பிகளும் வேறிரண்டு தூண்கள் ஒவ்வொன்றிலும் 23 கற்கம்பிகளும் உள்ளன.

**ஆழ்வார் திருநகரி:**

திருநெல்வேலி - திருசெந்தூர் நெடுஞ்சாலையில் உள்ளது, ஆழ்வார் திருநகரி. வைணவ ஆழ்வார்களில் புகழ்பெற்ற ஒருவரான நம்மாழ்வார் இவ்வூரில் பிறந்து என்றென்றும் பக்திமணம் பரப்பும் பிரபந்தங்களைப் பாடியுள்ளார். அவருக்குச் சடகோபன் என்ற பெயருமுண்டு. தொன்னாட்களில் ஆழ்வார்திருநகரிக்குக் குருகூர் என்ற பெயரும் இருந்தது. வழுதி வளநாடு என்ற ஒரு பகுதியின் 18 நாடுகளைச் சேர்ந்த வைணவர்கள் 14-ஆம் நூற்றாண்டில் இப்பகுதியில் ஒரு மடத்தைத் தோற்றுவித்தனர். அது பாண்டியன் குலசேகரன் காலம். அந்தமடம் அருளாளதாசன் மடம் என்று வழங்கிற்று. அங்கே திருவாய்மொழி மாமுனி இருந்திருக்கிறார். இங்குள்ள ஆண்டவன் திருநாடுடையபிரான் எனத் தித்திக்கும் தீந்தமிழில் அழைக்கப்படுகின்றான். சுந்தரபாண்டியன் காலத்தில் 1249-1251க் கிடையில் சக்ரபாணி நல்லூரைச் சேர்ந்த பல்லவராயன் வராகருக்கு ஒரு மண்டபம் எடுப்பித்தான். கவிபிராமகரின் கவிதையொன்று ஆதிநாதப் பெருமாளுக்கு அழகிய மண்டபம் ஒன்றை மழவராயன் கட்டியதாகக் கூறுகிறது. பூதலவீர உதய மார்த்தாண்டவர்மன் காலத்தில்தான் தலைவாயிற் கோபுரம் கட்டப்பட்டிருக்கக் கூடும். திருமுடி சுற்றினான் நந்தவனம் என்றொரு அழகிய பூந்தோட்டமும் இருந்திருக்கிறது.

ஆழ்வார்திருநகரியின்அழகிய கண்ணாடி மண்டபத்தில் நான்கு இசைத் தூண்கள் இருக்கின்றன.

சிலைகளும் தூண்களும் செய்து, கோயில் கட்டக் 'கணீர்' என்று ஒலிக்கும் சிறந்த கற்களையே பயன்படுத்தி வந்துள்ளனர். 'பொத்:பொத்' என்று தட்டும்போது ஒலித்தால் அவை சிலை செய்யத்தக்கவை அல்ல என்று ஒதுக்கிவிடுவர். ஆகவே சிறந்த கற்களில் செய்யப்பட்ட தூண்களையும், சிலைகளையும் தட்டிப் பார்த்தால் 'கணீர்' என ஒலிக்கும். தூண்களைக் குடையும்போது நடுவில் ஒரு தூணும் சுற்றிக் கம்பிகளுமாகக்குடைந்து பல கோயில்களில் அழகுபடுத்தியுள்ளனர். அமைப்புக் கேற்ப அவை ஒலி வேறுபாடுகளையும் காட்டும். இசை விற்பன்னர்களுக்கு அவை 'இசைத் தூண்'களாக இசைபாடுகின்றன. ஆனால், காண்போரெல்லாம் அவற்றைத் தட்ட ஆரம்பித்தால், சிதைந்து உடைந்து போகும். ஆதலின் இவை பற்றி அறிய நிபுணர்களின் உதவியுடன், தொடாமல் அணுகிக் கண்டு வியந்து காத்தல் நம் கடன்.

---

# 74 சிம்மாசனாதிபதிகள்

எம்பெருமானார் என்னும் இராமாநுசர் நியமித்தருளிய 74 சிம்மாசனாதிபதிகளின் பெயர்கள் வருமாறு:

1. முதலியாண்டான்
2. கந்தாடையாண்டான்
3. மாருதிப் பெரியாண்டான்
4. மாருதிச் சிறியாண்டான்
5. ஈசுவர ஆண்டான்
6. ஜீயராண்டான்
7. ஆண்டு கொண்டான்
8. ஆட்கொண்டான்
9. சயுண்ணி யாண்டான்
10. அம்மங்கி யாண்டான்
11. சோமாசி யாண்டான்
12. கூரத்தாழ்வான்
13. தெற்காழ்வான்
14. நெய்யுண்டாழ்வான்
15. சயுண்ணிப்பிள்ளை யாண்டான்
16. மிளகாழ்வான்
17. அனந்தாழ்வான்
18. கோமடத்தாழ்வான்
19. வேதாந்தி யாழ்வான்
20. மாடபூசி ஆழ்வான்
21 சேட்டலூர் ஆழ்வான்
22. கிடாம்பி ஆழ்வான்
23. உக்கலாழ்வான்
24. அரணபுரத்தாழ்வான்
25. உருப்பூட்டூர் ஆழ்வான்
26. சொட்டைநம்பி
27. பிள்ளை திருமலைநம்பி
28. தொண்டனூர் நம்பி
29. மருதூர் நம்பி
30. மழவூர் நம்பி
31. திருக்குறுங்குடிநம்பி
32. முடும்பை நம்பி
33. பராங்குச நம்பி
34. வில்லிபுத்தூர் நம்பி
35. வடுகநம்பி
36. வங்கிபுரத்து நம்பி
37. செடி எடுத்த நம்பி
38. சொக்கத்தூர் நம்பி
39. வங்கிபுரத்து ஆச்சி
40. புண்டரீகாட்சர்
41. பராங்குச பட்டர்
42. சிறுபள்ளி தேவராசபட்டர்
43. கோவிந்தபட்டர்
44. நம்பியூர் அரங்கசார பட்டர்
45. உள்ளூரப் பெரிய பெருமாள்பட்டர்
46. வரந்தரும் பெருமாள் பட்டர
47. எம்பார்.
48. சிறிய கோவிந்தப் பெருமாள்
49. சுந்தரத் தோளுடையார்
50. குருகைப்பிரான்பிள்ளான்
51. ஆர்க்காட்டுப் பிள்ளை
52. இராமாநுசப் பிள்ளை
53. திருமலை நல்லான்
54. வங்கிபுரத்து ஆச்சான்
55. கோமாண்டூர் ஆச்சான்
56. கிடாம்பி ஆச்சான்
57. கொங்கில் ஆச்சான்
58. ஈச்சம்பாடி ஆச்சான்
59. கணியனூர்ச் சிறிய ஆச்சான்
60. மஞ்சப்பூர்ச் சிறிய ஆச்சான்
61. என்னாச்சான்
62. எச்சான்
63. ஆசூரி ஆதிகேசவப்பெருமாள்
64. கிடாம்பிப் பெருமாள்
65. மகாமுனிப் பெருமாள்
66. அம்மங்கிப் பெருமாள்
67. பிள்ளை திருநறையூர் அரையர்
68. இராசமகேந்திரம் பெருமாள் அரையர்
69. பிள்ளை திருநாராயணபுரத்து அரையர்
70. பிள்ளை திருக்குறுங்குடி அரையர்
71. பிள்ளை திருவாய்மொழி அரையர்
72. திருவரங்கப் பெருமாள் அரையர்
73. ஆழ்வார் திருவரங்கப்பெருமாள் அரையர்
74. இராச நாராயணப் பெருமாள் அரையர்



தஞ்சை மாவட்டம், திருவாரூர் அருள்மிகு தியாகராஜசுவாமி திருக்கோயிலின் சார்பில் நடைபெற்ற சிறப்புத் திருமண விழாவில், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் கலந்து கொள்ளுதல். அறநிலைய ஆணையர் திரு. கு. ஆளுடையபிள்ளை, ஐ. ஏ. எஸ்., எண்கண் சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் நிர்வாக அறங்காவலர் திரு. கு. சச்சிதானந்தம், நிர்வாக அதிகாரி திரு வி. கே. கண்ணபிரான் ஆகியோர் உடனுள்ளனர்.



தஞ்சை மாவட்டம், எண்கண் அருள்மிகு சுபபிரமணியசுவாமி திருக்கோயில் திருமண மண்டபத் திறப்புவிழாவில், அறநிலைய அமைச்சர் மாண்புமிகு இராம. வீரப்பன் அவர்கள் குத்துவிளக்கு ஏற்றி வைத்தல். நன்னிலம் தொகுதிச் சட்டமன்ற உறுப்பினர் திரு. அ. கலையரசன், அறநிலைய ஆணையர் திரு. கு. ஆளுடையபிள்ளை, ஐ. ஏ. எஸ்., மற்றும் துணை ஆணையர் திரு. என். சீனிவாசன், நிர்வாக அறங்காவலர் திரு. சச்சிதானந்தம் ஆகியோர் உடனுள்ளனர்



திருஞானசம்பந்தர் இசைவிழாவில், நால்வர் கோயிலில் சம்பந்தர்-அப்பர்-சுந்தரர்-மணிவாசகர் என்னும் நால்வர் பெருமக்களின் திருவுருவச் சிலைகள் எழுந்தருளி, வீற்றிருக்கும் திருக்காட்சி.



திருஞானசம்பந்தர் இசைவிழாவில், நால்வர் பெருமக்களின் திருமுன்னர் ஓதுவார் பெருமக்கள் திரளாக அமர்ந்து, திருமுறை இசையரங்கு நிகழ்த்துதல்.

வெளியிடுபவர் : ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600 034.
ஆசிரியர் : ந. ரா. முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.எல்.
அச்சிடுவோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600 002.